6-1

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு—2.

ஸத்குருப்யோ நம:

# குருபக்தி விலாஸம்.

ஸ்ரீ ச்ருங்ககிரி ஸ்ரீ மடம் மஹாஸந்நிதானம்
அனுக்ரஹத்தை முன்னிட்டு
சிஷ்யர்களால் எழுதப்பட்டது

காலம் சென்ற சாஸ்த்ர ரத்னாகரம் பிரம்மஸ்ரீ தேதியூர் ஸுப்ரமண்ய சாஸ்த்ரிகள் அவர்களால் சோதிக்கப்பட்டு 1936ம் ஆண்டு "குருகுல"த்தால் ப்ரசுரிக்கப்பட்டு, இப்பொழுது அவர்களுடைய அனுமதியின்பேரில்

ப்ரசுரம்:

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி

[illegible] ரோட், சென்னை-17.

ஸத்குருப்யோ நம:

# குருபக்தி விலாஸம்.



சாஸ்த்ர ரத்னாகரம் ப்ரம்மஸ்ரீ தேதியூர்
ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்திரிகளவர்களால்
சோதிக்கப்பட்டது.

ப்ரசுரம் :

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி
2, பசுல்லா ரோட், சென்னை -17.



श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य
श्री शृंगेरी शारदापीठाधिप जगद्गुरु अभिनवविद्यातीर्थ महास्वामिनः

## முகவுரை

இச்சிறு நூல் ஸ்ரீசந்திரசேகர பாரதி அவர்கள் ஜகத் குருவாக ச்ருங்கேரியில் வசித்திருந்த காலத்தில் எழுதப் பட்டது. அப்பெரியார் 1954ஆம் ஆண்டில் பரமபதத்தை அடைந்தார்கள்.

இப்பொழுது ஜகத்குருவாக இருக்கும் ஸ்ரீ அபினவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள் அன்று தொட்டு ஸ்ரீச்ருங்ககிரி ஆசாரியராகப் பட்டம்ஏற்றுக்கொண்டுவிளங்குகிறார்கள்.

நமது நாட்டில் ஆங்கில ஆட்சிக்கு முன்னர் தர்ம சாஸ்திரங்களையும், ஸ்மிருதிகளையும் படித்த பெரியோர் கள் நியாயவாதிகளாகத் தொழில் நடத்தி வந்தனர். அவர்களுள் மைசூர் அதாலத்நியாய மன்றத்தை, கைபு ஸீதாராம சாஸ்திரி என்ற ஒரு பெரியார் அலங்கரித்தார். அவருடைய பேரன் ராம சாஸ்திரி என்பவர் வித்தையி லும் ஒழுக்கத்திலும் சிறந்து வாழ்க்கையை நடத்தி வந் தார். அவருக்கு 1917-ஆம் ஆண்டு நவம்பர் 13ம் தேதி யன்று (நள வருடம் ஐப்பசி 14-ம் தேதி) ஒரு புதல்வன் பிறந்தான். அக்குழந்தைக்கு ஸ்ரீனிவாஸன் என்று நாமம் சூட்டினார்கள்.

சிறு வயதிலேயே ஸ்ரீனிவாஸனுக்கு பஜனையிலும் பூஜையிலும் பேரவா இருந்தது. உலகத்தில் பற்றின்றி வளர்ந்து வந்தார். ஆகவே ஸ்ரீ சந்திரசேகர பாரதி ஸ்வாமிகள் இவரைத் தனக்குப் பின் ஜகத்குரு பட்டத் துக்கு ஏற்றவர் என்று தேர்ந்தெடுத்தது மிக்கப் பொருத்தமென அனைவரும் கொண்டாடினார்கள்.

1931-ஆம் ஆண்டில் இவர் சன்யாச ஆச்ரமத்தை அவலம்பித்தார். சகல சாஸ்திரங்களையும் பண்டிதர்களி

டம் பயின்ருர். ஸ்ரீ சந்திரசேகர பாரதியாரின் அருகாமை யிலேயே இருந்து அவருடைய அனுக்ரஹத்தை அள வின்றி அடைந்தார். ஸ்ரீ நரசிம்ம பாரதியாரைப் போல் இவர் படிப்பும் புகழும் ஓங்கி விளங்குவார் என்று ஸ்ரீ சந் திரசேகர பாரதியார் கூறிய வாக்கு இன்று மெய்யாக இருப்பதை நாம் காண்கிரும்.

ஸ்ரீசந்திரசேகர பாரதியார் மறைந்ததும் ஸ்ரீ அபினவ வித்யா தீர்த்தர், சில காலம் தனது குருவின் ஸமாதியில் பூஜை செய்தும் தனது தவத்தை வளர்த்தும் வந்தார். 1954 அக்டோபர் 16-ம் தேதி அவருக்குப் பட்டாபிஷேகம் நடந்தது. அச்சமயம் அதிகாரிகளும் சிடர்களும் திரளா கக் கூடியிருந்தனர்.

சிடர்கள் பலருடைய வேண்டுகோளுக்கு இணங்கி 1956ல் தென் இந்தியா பிரயாணம் ஆரம்பித்தார். முறையே தென் கன்னடம் ஜில்லாவிலும் மலையாளத்தி லும் முதலில் பிரயாணம் செய்தார். கொல்லூரில் வீற்றி ருக்கும் மூகாம்பிகையைப் பொன் பில்வத்தால் அர்ச்சனை செய்தார். குருவாயூரில் கண்ணனை வணங்கினர். திரிச் சூரில் அவ்வூர் வாசிகளான தெக்கே மடத்து நம்பூத்ரி ஸ்வாமிகள் இவரை வரவேற்றனர். அங்கு புகழ்பெற்ற சிவாலயத்தில் ஆராதனை செய்தார். சாதுர் மாஸ்யத் தைக் காலடியில் கழித்தார். அச்சமயம் அவர் தர்சனத் துக்குத் திரண்டவர் பல்லாயிரம். திருவதாங்கூர் அரச ரும் இவரை சேவை செய்து அனுக்ரகம் பெற்ருர். கணேச பூசை சமயத்தில் ஒரு வித்வத் சபை நடந்தது. பல பண்டிதர்கள் அதில் கலந்துகொண்டு ஸ்வாமிகளின் ஆசிர்வாதத்தைப் பெற்ருர்கள். கொச்சி மகாராஜா

ஸ்வாமிகளைத் தன் அரண்மனைக்கு அழைத்து மரியாதை செய்தார். ஸ்வாமிகள் அவருடைய பாண்டித்தியத்தை முன்னிட்டு அவருக்கு "அபினவ தர்க்க வாகீசர்" என்ற பட்டத்தை அளித்தார். திருவனந்தபுரத்தில் பத்மனாபனைத் தரிசித்தார். குமரியில் கன்யாக்குமரியை வணங்கினார்.

பிறகு பத்து மாத காலம் திருநெல்வேலி ஜில்லாவில் பிரயாணம் செய்தார். செந்தூர் ஆண்டவனை தரிசித்தார். 1957ல் சாதுர்மாஸ்யம் திருக்குற்றாலத்தில் நடந்தேறியது. அவ்வருடம் நவராத்திரி செங்கோட்டையில் கொண்டாடப்பட்டது. பின்னர் ஸ்வாமிகள் ராமனாதபுரம் ஜில்லாவில் பல இடங்களில் தங்கினார்கள். ராமேச்வரம் சென்று ராமனாதனை சேவித்தார்கள். திருப்பெருந்துறை சென்று ஆத்மனாதரை சேவித்தார்கள். அச்சமயம் தஞ்சை வாசிகள் பலருக்கு ஸ்வாமிகளுடைய தரிசனம் லபித்தது. அங்கிருந்து புதுக்கோட்டை வழியாக 1958 மார்ச்சு மாதம் மதுரை ஜில்லாவை அடைந்தார்கள். மதுரையில் அனைவரும் காணாத வைபவத்தோடு ஸ்வாமிகளை வரவேற்றனர். பின்பு பழனி சென்று விட்டு, திரும்பவும் காலடி சென்று சாதுர்மாஸ்யத்தை நடத்தினார்கள். அவ்வருடம் நடந்தேறிய வித்வத்ஸதஸில் கொச்சி மஹாராஜாவும் கலந்து கொண்டார்கள்.

1959-ம் ஆண்டு ஸ்வாமிகள் கோயமுத்தூர் சேலம் ஜில்லாக்களில் பிரயாணம் செய்து கோலார் ஜில்லா வழியாக ஆந்திர தேசம் சென்றார்கள. ஹைதராபாத் நகரத்தில் ஒரு பெரிய சங்கராலயத்தை ஸ்வாமிகள் சமீபத்தில் திறந்து வைத்தார்கள். தற்சமயம் ஸ்வாமிகள் பெஜவாடாவுக்கு விஜயம் செய்திருக்கிறார்கள்.

ஆலயங்களை சீர்செய்து பூஜைகளைச் சரிவர நடத்த வேண்டுமென்பதுஸ்வாமிகளுக்கு முக்கியமானகொள்கை. நம்முடைய பழமையான பண்பாடு, ஆலயங்களை அண்டியே வளர்ந்து வந்தது என்ற உண்மையை அவர்கள் பலமுறை வற்புறுத்தியிருக்கின்றனர். தற்சமயம் ஸ்ரீசாரதாம்பாள் ஆலயத்துக்குப் புதுகோபுரம் நிர்மாணம் செய்திருக்கிறார்கள். இதுவுமின்றி, அநேக ஆலயங்களில் ஸ்வாமிகள் தமது விஜய யாத்திரையின்பொழுது கும்பாபிஷேகம் செய்திருக்கிறார்கள்.

இக்காலத்தில் பரவிவரும் நாஸ்தீகக் கொள்கைகளையும், ஆண்டவனை மறக்கச் செய்யும் அரசியல் வாதங்களையும், அதனால் வளரும் வேற்றுமைகளையும் அழிப்பதற்கு அனைவருக்கும் உள்ளிருக்கும் உள்ளான் ஒருவனே என்ற நம்பிக்கையே மேலான மருந்து என்பது ஸ்வாமிகளுடைய கருத்து. மற்றவரைத் திருத்துவதற்கு முன் தன் தர்மத்தைக் கைப்பற்றி வாழ்வது இன்றியமையாதது என்று அவர்கள் கூறுகின்றார்கள். ஆத்ம சர்ச்சைக்கும் தினசரி வாழ்க்கைக்கும் இடையே தொடர்பு இருக்கிறது. ஒன்றை ஒன்று வளர்க்கிறது என்றும் அவர்கள் உபதேசம் செய்கிறார்கள்.

இப்பெரியாரைப் பார்க்கும்பொழுது விவேக சூடாமணியில் ஒரு செய்யுள் மனதுக்குத் தோன்றுகிறது :—

“ தன்னிலையில் சாந்தரா கிப்பிறப்பென்ற கடல்கடந்து
எண்ணிலா மாந்தருக்கு இளவேனில் கதிரவன்போல்
புண்ணிய வழிகாட்டிப் புத்துயிர் நல்கவேண்டி
கண்ணிய வாழ்க்கைதனில் தனித்திருப்பர் பெரியோர்
கள் ”

---



ऋश्यश्रृंगपुराधीशः चन्द्रशेखरभारती ।
ज्ञानस्वरूपी योगीन्द्रः गुरूणां परमो गुरुः ॥

# முன்னுரை

உன்னதமான ச்ருங்க கிரியில் சாரதாபீடாதிபதியாக விளங்கிப் பிரகாசித்துக்கொண்டு சமீப காலத்தில் ப்ராரப்த புண்ய சரீரத்தை அனுஸரித்து 60 வருஷம் பூர்த்தியாகிவிட்ட மகானுபாவாளுடைய ஒரு சில மஹாத்மியங்களின் வாயிலாக ஸ்துதி செய்யும் எண்ணத்துடன் இப்புத்தகம் எழுதப்பட்டிருக்கின்றது. இத்தயாமூர்த்தி உத்க்ருஷ்டமான சாக்ஷாத்காரத்தில் நிரந்தரமாக வர்சம் செய்துகொண்டு அவாளுடைய பரிபூர்ண அருட்ப்ரகாசத்தை ஸப்த ஞான பூமிகளிலும் பரிணமிக்கச் செய்திருக்கின்றார்கள். பெரியவாள் அதி உன்னதமான "வரிஷ்டாளாக" இருந்த போதிலும் அவாளுடைய அகண்ட பரிபூரணமான தயா விசேஷத்தாலும் சிஷ்யகோடிகளை உஜ்ஜீவிக்கும் ஹேதுவினாலும் சில சமயங்களில் பஹிர்முகமாக இருந்துகொண்டு "வரியாளாகக்" காணப்படுவது நம்முடைய பாக்ய விசேஷத்தினாலின்றி வேறொன்றினாலுமில்லை. இப்படிப்பட்ட தயாஸிந்துவின் ப்ரபாவத்தை ப்ரஸித்தப்படுத்துவது அவசியமில்லாவிடினும், இம்மாதிரி உத்தமான பணியில் நாம் ஈடுபடுவது லோக க்ஷேமத்திற்கும் அவாளுடைய அன்பிற்கு நாம் பாத்திரமாகி நற்கதி அடைவதற்கும் அத்யாவச்யமாகின்றது.

இந்தப் பெரியவாள் ஆதிசங்கர பகவத் பாதாளின் குரு பரம்பரையில் ஆவிர்ப்பவித்திருக்கும் உத்தமாள் லோக குருவான ஆதி ஆசார்யாள் அவசியம் நேரிடும் பொழுதெல்லாம் தானே புனரவதாரம் செய்து குரு

சிஷ்ய த்வைத பந்தத்தை வீரியமாகவும் தேஜோமயமாக வும் செய்கின்றார்கள் அந்த அவசரத்தில் தோன்றிய வாள்தான் இப்பொழுது நாம் பூஜிக்கும் ஸ்ரீ சந்த்ர சேகர பாரதி ஸ்வாமிகளின் குருவான ஸ்ரீ ந்ருஸிம்ம பாரதி ஸ்வாமிகள். இந்த பூஜ்யாள்களினிடையே இருக்கும் அன்யோன்ய அந்தரங்க பக்தி விச்வாச பாவத்தின் விசேஷத்தால் இரண்டு பரமாச்சார்யாளும் ஒன்றாகக் கலந்து புகழோங்கி நிற்பதாகத் தெரிகின்றது. ஸ்ரீ ந்ருஸிம்ம பாரதி ஸ்வாமிகள் தன்னுடைய இணையற்ற சிஷ்யரை அவாள் தாயினிடத்தில் கோவில் கொண்ட ஆதிபருவத்திலிருந்தேயே வரித்துக்கொண்டு, ஆவிர்ப வித்த பின்னும் அவாளுடைய வித்யாயாஸங்களை மேற் பார்வையிட்டு கடைசியில் அவாளைத் தன்னுடைய ஸ்தா னத்திற்கே அபிஷக்தாளாக ஆக்கிவிட்டார்கள். இந்த அபார தயைக்கு முத்தாய்ப்பு வைப்பதற்காகவும் எப் பொழுதும் குரு சரணுவிந்தத்தை ப்ரஹ்ம ரந்தரந்தில் தரித்துவரும் தன் இணையில்லா சிடருக்கு அனந்தரம் பரமசந்தோஷத்தை அளிப்பதற்காகவும் ஸ்ரீ ந்ருஸிம்ம பாரதி ஸ்மாமிகள் தன்னுடைய புனித வாசஸ்தலமாகிய மகா கைலாஸத்தையும் திரஸ்கரித்து தன்னுடைய சிஷ் யாளின் ஹ்ருதய கமலவாஸத்தை ஏற்றுக்கொண்டு புனிதமாக்கி விட்டார்களென்று தெரிகின்றது.

மேலும் இந்த "குருபக்தி விலாஸத்தி" லிருந்து நம்முடைய பெரியவாள் தான் சாக்ஷாத் பரமேச்வரன் என்றோ அல்லது அவாளிடத்தில் தான் ஸ்ரீ ந்ருஸிம்ம பாரதி ஸ்வாமிகள் பரகாயோபவேசம் செய்திருக்கின் ருர்கள் என்றோ நிச்சயிக்கிரோம். அதற்கு ஏதுவாக அர்த்த வாத ஜாதியில் சேர்ந்த அபூர்வமான சரித்திரங்

கள் ப்ரக்ருதத்திலுள்ள ஆசார்யமூர்த்தி மூலமாக நடத்தப்பட்டிருக்கின்றன. ஆகையால் நம்முடைய கொள்கை நிரூபணமாவதுடன் அது ப்ரமாண்யத்தையும் அடைகின்றது.

இப்பேர்ப்பட்ட மஹானுபாவாளின் ப்ரபாவங்கள். ஒப்பற்றதாகவும், அதி உன்னதமாகவும், விவரிக்க முடியாத எல்லையை அடைந்ததாகவும் கண்டு களி கொள்ளும் சாதாரண அற்ப ஜனங்களாகிய நாம் இந்த மஹா மூர்த்தியினிடத்திலே சரணமடைந்து உஜ்ஜீவிப்பதை விட சாத்யமான காரியம் வேறு எதுவுமேயில்லை என்று ஐயமின்றித் தெரிகின்றது.

மேலும் இந்தப் புத்தகத்திற்கு அனுபந்தமாக "ஸ்ரீ சாரதா பீடவிமர்சனம்" சேர்க்கப்பட்டிருக்கிறது. இதில் ஸ்ரீ சாரதாபீடத்தின் மஹாத்மியமும், அதை ஸ்தாபிக்கப் பட்டதின் வரலாறும் விவரிக்கப்படுகின்றது.



ॐ

# குரு பக்தி விலாஸம்

चन्द्रशेखरभारती यतिराजपादसरोरुहं
श्रृंगभूधरपीठरत्न सरोवरैकनिकेतनम् ।
स्वात्मबोध दिवाकराभविभासितं गुरुरूपिणं ।
शारदासुमनोहरं शुभदायकं प्रणमाम्यहम् ॥
सर्वार्थदायकं पुंसां करुणादृष्टि पातनम् ।
करोतु सर्वदाऽस्मासु चन्द्रशेखरभारती ॥
ऋश्यश्रृंगपुराधीशः चन्द्रशेखरभारती ।
ज्ञानस्वरूपी योगीन्द्रः गुरूणां परमो गुरुः ॥

இந்த ச்லோகத்தால் குறிப்பிடப்படும் மஹானு பாவாள தற்காலத்தில் மைஸூர் ஸமஸ்தானம் ச்ருங்க கிரி என்னும் புண்ய க்ஷேத்ரத்தில் சாரதா பீடாதிபதி யாக விளங்கி ப்ரகாசித்துவரும் விஷயமானது லோக ப்ரஸித்தமானது.

மேற்சொன்ன பெரியவாள் மஹா யோகி என்றும், 'ஸ்தித ப்ரக்ஞன்' என்று பகவத்கீதையில் சொல்லப் பட்டிருக்கும் ப்ரம்ம நிஷ்டருக்கு உதாரணமாக காட்டக் கூடிய அபூர்வமான வ்யக்தி என்றதும் ஸர்வலோக ப்ரஸித்தமானதே. அவாளுடைய ஸந்நிதியில் சென்று தத்வ உபதேசங்களை அவாளுடைய முகமாக உபதேசம் செய்துகொண்டு ஜன்மஸாபல்யத்தை அடையவேண்டு

மானால், ஸஞ்சிதமான புண்ய கர்மாக்களை ஈச்வர ஆராதன ரூபமாக அநேக காலங்களில் அனுஷ்டித்து வந்த புண்யவான்களாகவே இருக்கவேண்டும்.

आचार्यल्लब्धबोधा अपि विधिवशतः सन्निधौ संस्थितानां
त्रेधा तापं च पापं सकरुणहृदयाः स्वोक्तिभिः क्षालयन्ति ॥

என்று பூஜ்ய பகவத்பாதாள் சதச்லோகீ என்ற க்ரந்தத்தில் சொல்லியுள்ள ப்ரகாரம், தற்காலத்தில் வர்ணிக்கப்படும் பெரியவாளுடைய ஸந்நிதியில் சென்று அவாளை தர்சனம் செய்வதற்கோ, அவாளுடைய முகாரவிந்தத்திலிருந்து பெருகி வரும் அம்ருதவாக்கை பானம் பண்ணுவதற்கோ, மஹத்தான ஸத்கர்மாவை செய்த பெரிய புண்யவான்களாக இருக்கவேண்டும் என்பதில் யாருக்கும் ஸந்தேகம் ஏற்பட நியாயமில்லை.

प्रजहाति यदाकामान्सर्वान्पार्थ मनोगतान् ।
आत्मन्येवात्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥

என்ற பகவத்கீதா வாக்யத்தை அனுஸரித்து, ஸகலவிதமான புத்தி வ்ருத்திகளை ஸ்வரூபேண பாதித்து ஸ்வரூபானந்தத்தில் நித்யத்ருப்தராக விளங்கிவரும் ப்ரம்மவித்து என்பதில் இந்த மஹானுபாவாளைப் பார்த்த மாத்திரத்திலேயே யாரும் ஒப்புக்கொள்ளக்கூடியது. இந்த பெரியவாள், இவர்களுக்கு முன்பு சாரதாபீடத்தில் விளங்கிவந்த ராஜயோகியான ஸ்ரீ ஸச்சிதானந்தஸ்வாமி நவ ந்ருஸிம்ம பாரதீந்தர மஹா ஸ்வாமிகள் தனக்குப் பிறகு பீடாதிபதியாக வரிக்கப்பட்ட மஹானுபாவாள் என்று தெரிகிறது. இவர்களுடைய பால்யகாலத்து வித்யாப்யாஸங்கள் எல்லாம் ந்ருஸிம்ம பாரதீந்தர மஹா ஸ்வாமிகளுடைய ஆதினமாகவே விளங்கி வந்தன. மஹிஷாஸுரபுரம் என்ற மைஸூரில் வித்யையை

அப்யாஸம் செய்தார்கள். ந்ருஸிம்மபாரதி மஹா ஸ்வாமிகளிடம் இவர்களுக்குள்ள அந்தரங்கபக்தியை ப்ரும்மாதி தேவர்களாலும் வர்ணிக்க முடியாது. தனது குருவான ந்ருஸிம்மபாரதி மஹா ஸ்வாமிகள் அவர்களுடைய திவ்ய சரணாரவிந்தம் இவர்களுடைய ப்ரம்மரந்த்ரம் என்று சொல்லப்படும் சிரஸில் எப்பொழுதும் தரிக்கப்பட்டு வருகிற வழக்கம் உண்டு.

'மஹாகைலாஸத்திற்கு அதிபதியான பரமேச்வரன் இக்கலியில் சுமார் 2500 வருஷங்களுக்கு முனபு, கேரள தேசத்தில் பூர்ணாநதி தீரத்தில் ஆதிசங்கர, பகவத்பாதாளாக அவதாரம் செய்து, 7-வது வயதிலேயே ஸந்யாஸத்தையும் ஸ்வீகரித்துக்கொண்டு, ப்ரம்மவித்யையை லோகத்தில் பரவச்செய்தார்கள்' என்ற சங்கரவிஜயத்தின் ஸாராம்சமும் புண்ய ஜனங்களுடைய புத்திக்கு ப்ரத்யக்ஷமானது. 32 வயதுக்குள்' ஞானகாண்டத்தை உலகத்தில் நிலைநாட்டிவிட்டு மஹா கைலாஸத்திற்குப்போகும்பொழுது 'அத்வைத மதத்தை நாம் ஸ்தாபனம் செய்தோமே, இதை ப்ராணிகள் குரு சிஷ்ய பாவத்திற்கேற்பட்ட த்வைதத்தையும் தள்ளிவிட்டு ஸ்வயம் ஆசார்ய புருஷாளாகவே ஆகிவிடுவார்களோ' என்ற மனக்கவலையுடன் 'தனக்கு ஸத்ரூபமான ப்ரம்மத்தை உபதேசம்செய்த ஸத்குருவினிடத்தில் சிஷ்ய ஜனங்களுக்கு மான்யதாபுத்தி போகக்கூடாது, த்வைதபாவத்தை யாவஜ்ஜீவம் ரக்ஷித்துக்கொண்டே வரவேண்டும் என்ற சாஸ்த்ரார்த்தத்தை த்ருடமாக பரவச்செய்ய தவறிவிட்டோமே என்ற கவலையினால் அதை த்ருடமாக ஸம்ஸ்தாபனம் செய்ய மறுபடியும்கொஞ்ச காலம் கழித்து வித்யா சங்கரர் என்ற திருநாமத்தால் ப்ரஸித்திபெற்ற அவதாரம் செய்தார்கள். அவர்களைத்தான் வித்யாரண்யாள் என்றும் சொல்வார்கள். அதற்கு பிறகும், கலியுகத்தின் மஹிமையினால் உலகத்தில் காமத்தினுடைய கொடுமையினால் விவேக விக்ஞானம் குறைந்து, அதிலிருந்தும் பஹுளமாக அதர்மம் மேலிட்டு, தர்மத்திற்கு அபிபவம் அதிகமாகி லோகத்தில் அதர்மம் நாளுக்கு நாள் ஏற்பட்டு வருவதைக்

கண்டு மறுபடியும் ஸ்ரீ ஸச்சிதானந்தசிவாபினவ ந்ருஸிம்ம பாரதீந்த்ர மஹா ஸ்வாமிகள் அவர்களாக அவதாரம் செய்ததாக ப்ராசீன சங்கரவிஜயம் மூலமாகத் தெரிய வருகிறது. கபிலாநதிதீரத்தில் நஞ்சன்கூடு என்ற புண்யக்ஷேத்திரத்தில் ஸ்ரீ ந்ருஸிம்ம பாரதி மஹாஸ்வாமிகளின் திரு அவதாரம், அவாளுடைய மஹத்வம், யோக மஹிமை, வைராக்யத்தின் பெருமை இவைகளை ப்ரும்மஸ்ரீ ஸ்ரீமான் ஸ்ரீகண்ட சாஸ்த்ரிகள் அவர்களால் ப்ரசுரப்படுத்தப்பட்டிருக்கும் புஸ்தக மூலமாக அறியக்கூடும். சங்கரவிஜய ஸம்பந்தமான அநேக இதரக் க்ரந்தங்களைக் கவனித்துப் பார்க்கும்பொழுது ந்ருஸிம்ம பாரதி மஹா ஸ்வாமிகள் அவர்கள் தற்காலத்தில் விளங்கிவரும் சந்த்ரசேகர பாரதி மஹா ஸ்வாமிகளுடைய புண்ய தேஹத்தில் பரகாயப்ரவேசம் செய்ததாக ப்ரஸித்தமாக தெரியவருகிறது. ஆகையால் ந்ருஸிம்ம பாரதி மஹா ஸ்வாமிகள் அவர்களுக்கு அத்யந்தனுளாக உள்ள சந்த்ரசேகர பாரதி மஹா ஸ்வாமிகளுடைய ஹ்ருதயாகாசத்தையே தன்னுடைய வாஸஸ்தானமான கைலாஸமாகவே வைத்துக்கொண்டு அவாளுடைய ஹ்ருதயகமலத்திலேயே ப்ரஸன்னுளாக இருந்து வருகிருர்கள். கொஞ்ச காலத்திற்குமுன் சந்த்ரசேகர பாரதி மஹாஸ்வாமிகளை தர்சனம் செய்த புண்யவான்கள் தத்காலத்தில் பெரியவாளை தர்சனம் செய்தார்களேயானுல் ந்ரஸிம்ம பாரதி மஹாஸ்வாமிகளுடைய உருவமாகவே ப்ரத்யக்ஷமாகத் தெரியவருகிறது. அநேக ஜனங்கள் இவாளை தர்சனம் செய்துவிட்டு முன்னிருந்த ந்ருஸிம்மபாரதி மஹாஸ்வாமிகளே இவாள் என்று உத்கோஷித்தார்கள். இவாளுடைய அவதாரமும் ச்ருங்ககிரி என்ற புண்ய க்ஷேத்திரத்தில்தான். இவாளுடைய ஆவிர்ப்பாவத்திற்கு மூலகாரண பூதாளான தாய் தந்தைகளும் மஹா புண்யவான்கள். தாயார் எனச் சொல்லப்படும் புண்யவதி அநேக சிசுக்களை உண்டுபண்ணினவளானுலும் அவைகளுக்குள் ஒன்றும் தனக்கு தங்கி ஜீவிக்கும்படியான பாக்யத்தைச் செய்யவில்லை. தற்காலத்தில் விளங்கிவரும் இம்மஹான் அந்த அம்மாளின் 13வது கர்பமாகச் சொல்லபடுவார்கள்.

ச்ருங்ககிரியில் சாரதா மஹாநவராத்ரியில் சாரதாம்பாளை ஆராதிப்பது மிகவும் விசேஷமானது என்பது லோக ப்ரஸித்தமானது ந்ருஸிம்ம பாரதீந்த்ராள் உயர்ந்த ஸ்ரீவித்யா உபாஸகர்களானதால், ஒரு நவராத்ரியில் தேவியை ஆராதித்துவிட்டு, ஸுவாஸினி பூஜை நடந்தது. அநேக ஸுவாஸினிகளுக்கு நூதன வஸ்த்ரங்கள் கொடுக்கும் வழக்கம் உண்டு. தற்காலத்தில் பெரியவாளாக விளங்கி வருபவர்களின் தாயார், குடும்பத்தின் ச்ரம தசையினால் இம்மஹானை 13-வது கர்ப்பமாக தரித்துக்கொண்டிருக்கும் ஸமயத்திலும், தனக்கும் வஸ்த்ரம் கிடைக்கும் என்ற எண்ணத்துடன் ஸுவாஸினிகளின் மத்தியில் தானும் போஜனம் செய்ய உட்கார்ந்தாள். ந்ருஸிம்ம பாரதீந்த்ராள் ஸுவாஸினிகளைப் பூஜை செய்து ஸாக்ஷாத் பராசக்தியின் ஸ்வரூபமாகவே,

स्त्रियस्समस्ताः तव विभेदाः

என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து ஒவ்வொரு ஸுவாஸினிகளுக்கும் கட்கமாலையினால் அபிமந்த்ரிதமான விசேஷ அர்கயதீர்த்தத்தை.

अळिपात्रमिदं तुभ्यं दीयते पिहिशतान्वितम् ।
स्वीकृत्य सुभगे देवि जयं देहि रिपून् दह ॥

என்ற மந்த்ரத்தைச் சொல்லிக்கொண்டு ப்ரக்ருதத்தில் பெரியவாளான மஹாஸ்வாமிகளின் தாயார் கையில் ஆபோசனம் போட்டார்கள். அந்த அம்மாள் அதை வாங்கிகொள்ளும் ஸமயத்தில் தன்னுடைய இரண்டு கண்களிலிருந்து ஜலம் பெருகி அழ ஆரம்பித்தாள். ந்ருஸிம்ம பாரதி மஹா ஸ்வாமிகள் அவர்கள் அந்த அம்மாளை பார்த்து ஆந்த்ரபாஷையில் "எதற்காக அழுகிறாய்" என்று கேட்க, அந்த அம்மாள் தன்னுடைய வ்ருத்தாந்தத்தை ஸங்க்ரஹமாகச் சொன்னாள். "எத்

தனேயோ கர்பத்தைச் சுமந்து ப்ரயோஜனமற்றதாய் விட்டது. தற்காலத்தில் 13-வது கர்பத்தை தரித்து வருகிறேன். தங்களுடைய பரிபூர்ண அனுக்ரஹத்தால் இந்த சிசுவாவது நீடித்து ஜீவிக்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டாள். ந்ருஸிம்ம பாரதி மஹா ஸ்வாமிகள் அவர்களும் அந்த அம்மாளே ஸமாதானம் செய்து விட்டு "இந்த கர்பத்திலிருந்து உண்டாகும் சிசுவை சாரதாம்பாளேப் பூஜை செய்வதற்கு இந்த மடத்திற்கு தானம் செய்வதாக பக்தியுடன் ஸங்கல்பம் செய்து தீர்த்தத்தை பூமியில் விட்டு விடு. இந்த கர்பத்தில் உள்ள குழந்தை சிரஞ்சீவியாயும் லோக குருவாகவும் விளங்கிவரும்" என்று அனுக்ரஹம் செய்தார்கள். இந்த அனுக்ரஹ பலத்தால் அந்த 13-வது கர்பத்திலிருந்து ஆவிர்பவித்த மஹானுபாவனே நமது லோக குரு சந்த்ரசேகரபாரதி மஹாஸ்வாமிகள் என்று அறியவும்.

முன் சொல்லியபடி, தர்ம ரக்ஷணத்திற்காக அவதரித்து, தற்காலத்தில் ச்ருங்ககிரியில் விளங்கிவரும் மஹானுபாவாளான ஸ்ரீ சந்த்ரசேகரபாரதி மஹாஸ்வாமிகள் அவர்கள் சுபேச்சை, விசாரணு, தனுமானஸி, ஸத்வாபத்தி, அஸம்ஸக்தி, அபாவனு, துரீயம் என்ற ஏழுவிதமான ஞான பூமியில் அரூடராக விளங்கி வருகிறார்கள் என்பதை அறியவும்.

சுபேச்சை என்ற முதல் பூமிக்கு, ஸாதன சதுஷ்டய ஸம்பத்தியானது த்ருடதரமாக இருந்து வருங்காரணத்தால், ஸத்ரூபமான ப்ரம்மத்தைத் தனக்கு உபதேசம் செய்து தன்னே க்ருதார்த்தனுகச் செய்துவைக்கும் ஸத் குருவைத் தேடுகிற அவஸ்தையாக ஒபபுக்கொள்ள வேண்டும். சென்ற ஜன்மாக்களில் ச்ரா

-

श्रद्धाभक्तिपुरस्सरेण विहितेनैवेश्वरं कर्मणा

सन्तोप्यार्जिततत्प्रसादमहिमा जन्मान्तरेष्वेव यः ।

नित्यानित्यविवेकतीव्रविरतिन्यासादिभिस्साधनैः
युक्तस्स श्रवणे सतामभिमतो मुख्याधिकारीद्विजः ॥

என்ற பகவத்பாதாள் அவர்களின் வசனத்தை அனுஸரித்து 'நித்ய நைமித்திக கர்மாக்களை நாம் செய்கிறோம்' என்ற கர்த்ருத்வ அபிமானத்தையும் விட்டு, அந்தந்த கர்மாவின் பலங்களை அனுபவிக்க வேண்டும் என்ற அபிலாஷையையும் விட்டு விட்டு, பரமேச்வர ஆராதன ரூபமாக ஸத்கர்மாக்களை அனுஷ்டித்துவரும் காரணத்தால் மிகவும் த்ருடமாக சித்தசுத்தி ஏற்பட்டு ஞானகர்பமான பரவைராக்யத்தை அடைந்து ப்ரம்மம் ஒன்றுதான் நித்யமான வஸ்து, ப்ரம்மத்திற்கு வேறான த்வைத ப்ரபஞ்சம் அநித்யமானது என்ற "நித்யாநித்ய வஸ்து விவேகமும்" இஹலோகத்தில் க்ருஷி முதலான கர்மாக்களால் ஸம்பாதிக்கப்படும் ஸஸ்யாதி லோகங்கள் எவ்விதம் அழிவுள்ளதோ, அவ்விதமே யக்ஞாதிகளால் ஸித்திக்கும் ஸ்வர்காதி லோகங்களும் அநித்யந்தான் என்று

तद्यथा इह कर्मचितो लोकः क्षीयते ।
एवमेव अमुत्र पुण्यचितो लोकः क्षीयते ॥

என்ற ஶ்ருதியையும்

यत्कृतकं तदनित्यम्

என்ற நியாயத்தையும் அனுஸரித்து, இஹலோகத்திலுள்ள விஷய போகாதிகளில் ஏற்படுகிற துச்சத்வ புத்தியை பரவைராக்யம் என்றும், ஞானகர்பம் என்றும் சொல்லியபடி வசீகார ஸமக்ஞம் என்று பதஞ்சலி மஹர்ஷி கூறிய வைராக்யத்தோடு மனோநிக்ரஹம் பஹிரிந்த்ரிய நிக்ரஹம், லௌகிக வைதிக கர்மாக்களில் ஒழிவு அடைவதிலும், சீதோஷ்ணாதிகளை ஸஹிப்பதிலும், சாஸ்த்ரார்த்தத்திலும் ஸத்குருவின் உபதேச வாக்யத்தி

லும் அப்ரதிஹதமான ச்ரத்தையும், ஸத்குருவினால் உபதேசிக்கப்பட்ட தத்வத்தை, மற்ற விஷயாதிகளை மனதினால் நினைக்க அவகாசமில்லாமல் செய்து கொண்டு, நிரந்தரமாக அந்த தத்வத்தில் மனதை லயிக்கச்செய்து, தன்னுடைய அனுபவத்திற்கு வரும்படி செய்துகொள்வது என்ற ஸமாதியும் சேர்ந்து க்ரமமாக சமம், தமம், உபரதி, திதிக்ஷை, ச்ரத்தை, ஸமாதானம் என்ற ஸமாதிஷட்கஸம்பத்தியும் ஏற்பட்டு, மந்தம், மத்யமம், தீவ்ரம் தீவ்ரதரம் என்று நான்குவிதமாக லோகத்தில் ப்ரஸித்திபெற்ற, மோக்ஷேச்சையில் மந்தம், மத்யமம், தீவ்ரம் என்ற மூன்றுவிதமான முமுக்ஷுத்வத்தைத் தள்ளிவிட்டு, தீவ்ரதரம் என்ற முமுக்ஷுத்வம், விவேகம், வைராக்யம், சமாதிஷட்கஸம்பத்தி என்ற நான்குவிதமான ஸாதனங்களையும் கைக்கொண்ட மஹானுபாவனை உத்தமாதிகாரி என்றும், சுபேச்சா முதலான ஏழுவிதமான ஞான பூமிகளுக்குள் முதல் பூமியான சுபேச்சா என்பதில் ஆரூடனாக இருப்பதாக ஒப்புக்கொள்ள வேண்டும். பிறகு ஸத்ரூபமான ப்ரம்ம தத்வத்தைத் தனக்கு உபதேசம் செய்ய வல்லமையுள்ள ஆசார்யனை தேடிப் பிடித்து,

तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।

என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து உபஸதனத்தால் ஆசார்யனுடைய கருணைக்குப் பாத்ரமாகி வேதாந்த விசாரம் செய்து வருவது என்பதானது விசாரணை என்ற இரண்டாவது பூமியாக சொல்லப்படும்.

குருவினால் உபதேசிக்கப்பட்ட அபாதிதமான தத்வத்தை சுத்தமான மனதினால் த்யானம் செய்து, கண்டமான விஷய ஆகாரமாகப் பரிணமிக்கும் ஸ்வபாவமுள்ள மனதை விஷயாதிகளிலுள்ள மித்யாத்வ நிச்சய புத்தியினால் பாதித்து அகண்டமான ப்ரம்மமாக அந்தக்கரணமானது பரிணமிக்கும் ஸ்வபாவமுள்ளதாகச் செய்ய வேண்டும். இதை தனுமானஸி என்ற மூன்றாவது பூமியாக அறியவும்.

நிதித்யாஸனத்தின் மஹிமையினல் ப்ரத்யகாத் மாவை ப்ரம்மமாக ஸாக்ஷாத் கரித்துக்கொண்டு ஸ்வ ரூபானந்தத்தில் முழுகி வருவது ஸத்வாபத்தி என்ற நான்காவது பூமியாகும்.

ப்ரம்மத்திற்கு வேருன த்ருச்ய ப்ரபஞ்சத்தை ஸ்வப்ன பதார்த்தத்திற்கு ஸமானமாக பார்க்கும் கார ணத்தால், கொஞ்சமேனும் லோகவாழ்க்கையில் ஸத் யத்வபுத்தி யில்லாமல் த்ருச்சயமான ஜகத்தை மித்யை யாக அனுபவித்து வரும் நிலையை அஸம்ஸக்தி என்ற ஐந்தாவது பூமியாக ஒப்புக்கொள்ள வேண்டும்.

காடமாக நித்ரை செய்யுங் காலத்தில் லோகத்தி லுள்ள ஒரு வஸ்துவும் பாஸிக்காமல் இருப்பதுபோல். ஸத் ஸம்பத்தி எனற ப்ரம்ம தாதாத்ம்யத்தால் லோக வாழ்க்கை மறைவு அடைந்திருப்பது அபாவனை என்ற ஆருவது பூமியாகச் சொல்லப்படும்.

லோகத்தில் சில ஸந்தர்பத்தில் ப்ரம்மஸமாதியி லிருந்தும் வ்யுத்தானத்தை யடைந்து, ஸ்வயமாகவே வ்யவஹாரங்களைச் செய்வதுபோல் நடித்துவரும் பெரி யோர்களை 6-வது பூமியில் ஆரூடன் என்று அறிய வேண்டும்.

ஸ்வயமாகவும், ப்ரம்ம ஸமாதியிலிருந்தும் வ்யுத் தானத்தை அடையாமலும் பரர்களுடைய நிபந்தனை யாலும் வ்யுத்தானத்தை அடையாமலும் காடஸுஷுப் தியில் இருந்துவரும் பெரியோர்களை துரீயாள் என்று சொல்ல வேண்டும.

இவ்விதம் சுபேச்சை, ச்ரவணம், மனனம், ஸத்வா பத்தி என்ற அவஸ்தையை ஜாக்ரத அவஸ்தை என்றும், அஸம்ஸக்தி; என்பதை ஸ்வப்ன அவஸ்தை என்றும், அபாவனை என்பதை ஸுஷுப்தி அவஸ்தை என்றும் துரீயம் என்பதை காட ஸுஷுப்தி என்றும் அறியவும். பிறகு சுபேச்சை முதலான ஏழுவிதமான

ஞான பூமிகளில் நான்காவது பூமியில் ஆரூடரான மஹானுபாவனை ப்ரம்மவித் என்றும், ஐந்தாவது பூமியில் ஆரூடனை "வரன்" என்றும், ஆருவதில் உள்ள மஹானுபாவனை, "வரீயான்"—என்றும், ஏழாவது பூமியிலுள்ளவனை, வரிஷ்டன் என்றும, சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

ப்ரக்ருதத்திலுள்ள, நமது ஸத்குருவாகவும், ஜகத்குருவாகவும் விளங்கிவரும், சந்த்ரசேகர பாரதீ மஹாஸ்வாமிகள் அவர்கள், சில காலம் ப்ரம்மநிஷ்டாளாக ப்ரம்ம ஸமாதியில் அமர்ந்து இருந்தாலும்கூட, லோக க்ஷேமார்த்தமாக ஸமாதியிலிருந்தும் வ்யுத்தானத்தை அடைந்தவர்கள்போல், சில புண்யவான்களான மஹான்களுக்கு தர்சனம் கொடுத்து மிதமாக ஸல்லாபம் செய்து கொண்டு வரும் நிலைமையைக் கவனிக்கும் பொழுது, அவாளை வரீயான் என்ற ராஜயோகியாகவே சொல்லக் கூடியதாக இருந்து வருகிறது.

இந்த மஹானுபாவாளுக்கு தத்காலத்தில் நந்தன வருஷம் சென்ற துலா மாதம், க்ருஷ்ணபக்ஷம், ஏகாதசி அன்று ப்ராரப்த புண்ய சரீரத்தை அனுஸரித்து 60 வருஷம் பூர்த்தியாகிவிட்டது. அவாளுடைய ஸமாதி நிலையை கவனித்தால்

यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।
आत्मन्येव च संतुष्टः तस्य कार्यं न विद्यते ॥

என்ற பகவத்கீதா வாக்யத்தை அனுஸரித்து யாதொரு விதமான பரிசர்யையும் சிஷ்ய ஜனங்கள் செய்யவேண்டிய அவச்யம் கிடையாது. ஆகிலும்,

नैवात्मनः प्रभुरयं निजलाभपूर्णः मानं
जनात् अविदुषः करुणो वृणीते ।

यद्यज्जनो भगवते विदधीतमानं
तच्चात्मने प्रतिमुखस्य यथा मुखश्रीः ॥

என்ற ஸ்ரீமத் பாகவத வசனத்தை அனுஸரித்து, லோகத்திலுள்ள ப்ராணிகளின் க்ஷேமாபிவ்ருத்திக்கும், முக்யமாக சிஷ்ய ஜனங்களுடைய மனோரத பூர்த்திக்கும், ஸந்தர்ப விசேஷத்தில் நமது பெரியவாளை உத்தேச்ய புருஷாளாக வைத்துக்கொண்டு பகவானை ஆராதிப்பதுபோல் सेशं मयाकल्पितं என்ற மனீஷா பஞ்சகத்தை அனுஸரித்து, ஈச்வரனுக்கும் அதிஷ்டான ஸ்தானமான நமது குரு மூர்த்தியை ஆராதிப்பது, ப்ராணிகளுடைய பூர்வ ஜன்மாக்களில் செய்தபுண்ய விசேஷத்தால்தான் ஏற்படும் என்பதில் ஸந்தேகமில்லை.

நமது பெரியவாளைப்போல் ஒரு பிம்பம் இந்த விசேஷத்திற்கு அறிகுறியாகத் தயார் செய்து ஸர்வ ஜனங்களும் எப்பொழுதும் அவாளை தர்சனம் பண்ணிக்கொண்டு வரும்படி ஸ்திரப்படுத்த வேண்டியது புண்யவான்களின் அத்ருஷ்ட விசேஷமாகும். அத்துடன், அவாளுடைய வ்யுத்தான தசையில் மிகவும் புண்யத்தைச் செய்த சிஷ்ய ஜனங்களுக்கு உபதேசம் செய்து க்ருதார்த்தர்களாகச் செய்துவைத்த விவரங்களையும் ஒரு புஸ்தக ரூபமாக வெளியில் ப்ரகாசபடுத்துவது முக்யமாகும்.

மந்த்ர அர்த்தவாத இதிஹாஸ புராணங்களுக்கு மானாந்தரவிரோதம் இல்லாமலிருக்கும் பக்ஷத்தில் ஸ்வார்த்தத்தில் ப்ராமாண்யத்தை ஒப்புக்கொள்ளலாம்.

मानान्तराविरोधित्वे आर्थोवादोऽपि यथा श्रुतः ।

என்ற வாக்யத்தை அனுஸரித்து, அர்த்தவாதம் என்ற சாஸ்த்ரமும் ப்ராமாணாந்த்ர விரோதமில்லாமலிருக்கும் பக்ஷத்தில் எவ்விதம் எந்த அர்தத்தை போதிக்கின்ற

தோ, அந்த அர்த்தத்தில் அந்த வாக்கியத்திற்கு ப்ரா மண்யமுண்டு.

ப்ரக்ருதத்திலுள்ள பெரியவாளை ஸாக்ஷாத் கைலாஸ வாஸியான பரமேச்வரன்தான் என்று ஒப்புக்கொள்வதற்கோ அல்லது ஸாக்ஷாத் பரமேச்வரனின் அபரஸ்வரூபமான முன்புள்ள ந்ருஸிம்மபாரதி மஹா ஸ்வாமிகள் அவர்கள் ப்ரக்ருதமான ஆசார்யாரின் வ்யக்தியில்பரகாய ப்ரவேசம் செய்திருக்கிறார்கள் என்று முன் சொல்லியதத்கு அத்தாட்சியாகவோ, க்ரஹித்துக் கொள்ளக்கூடிய அர்த்தவாத ஜாதியில் சேர்ந்த சில அபூர்வமான சரித்ரங்கள் ப்ரக்ருதத்திலுள்ள ஆசார்ய மூர்த்தி மூலமாக நடத்தப்பட்டிருக்கின்றன.

विधिनात्वेक वाक्यत्वात् विध्यर्थत्वेन स्तुतीनां स्युः ।

என்ற பூர்வமானமீமாம்ஸா ஸூத்ரத்தை யனுஸரித்து "அபூர்வவிதியினால் போதிக்கப்படுகிற அவச்யகர்த்தவ்யமான கர்மாவையோ, அதில் ஸம்பந்தப்பட்ட தேவதைகள் முதலான அங்கங்களையோ ப்ரசமஸை செய்து விதி வாக்யத்தோடு அர்த்தவாத வாக்யங்கள் வேறுபடாமல் ஏகவாக்யதையை அடைந்து 'விதி சேஷத்வேன' ஸ்வார்த்தத்திலும் ப்ராமாணயத்தை அடைகின்றன." என்று சொல்லப்பட்டிருக்கும் பூர்வதந்த்ர ஸூத்ரத்தை அனுஸரித்தால், பரக்ருதத்திலுள்ள பரமாசார்யளுடைய ஆராதனமானது மிகவும் அவச்யமான கார்யமானதினால் அதற்கு அனுஸரணையாக பரமாசார்யாள் மூலமாக நடததப்பட்டு வந்த சில அர்த்தவாத கதாரூபமான சரித்திரங்களை ஆசார்ய பக்தியுள்ள ஜனங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்த மஹானுபாவாளுடைய விஜய யாத்ரா ஸஞ்சாரத்தில் மதுரை என்ற ராஜதானிக்கு ஸமீபத்திலுள்ள ஒரு க்ராமத்தில் மாத்யாஹ்நிக காலததில் ஸ்ரீ சந்த்ரமௌளீச்வர பூஜையையும் பார்த்து பகவானையும் ஆசார்யாளையும் தர்சனம் செய்வதற்காக வந்த இர

ளான ஜனங்களுக்கு பூஜையின் நிர்மால்ய தீர்த்தத்தை அனுக்ரஹ பூர்வ ப்ரஸாதமாகக் கொடுத்து அனுக்ர ஹித்து வந்தார்கள். அந்த ஸந்தர்பத்தில் ஸ்த்ரீ ஜாதியில் சேர்ந்த ஒரு ஸுவாஸினி தீர்த்த ப்ரஸாதத்தை வாங்கி கொள்ள ச்ரத்தா பக்தியுடன் ஆசார்யாளின் ஸமீ பத்தில் வந்து ப்ரார்த்தித்தும், ஏராளமான கூட்டத்தில் தீர்த்த ப்ரஸாதத்தை அளித்துவரும் பெரியவாளும் அந்தம்மாளுக்கு மாத்திரம் தீர்த்த ப்ரஸாதத்தை கொடுக்கவில்லை. ஸ்தானத்தைவிட்டு உடன் எழுந் திருந்து அந்தர் முகமாகச் சென்றுவிட்டார். அந்த அம்மாளும் பஹுகாலம்வரை பிறகு தீர்த்தம் கொடுப்பாரோ என்று நினைத்து ஸ்ரீ மடத்திலேயே காத்துக்கொண்டிருந்தாள். ஆனால் வரவேயில்லை. பிறகு அந்த அம்மாளும் தன் க்ரஹத்திற்கு திரும்பிப் போய்விட்டாள். பெரியவாளுடைய முகமாக தீர்த்த ப்ரஸாதம் கிடைக்கவில்லை என்ற மனோ வருத்தத் தால் அன்று ஆஹாரத்தைகூடச் செய்யாமல் மிகவும் துக்கப்பட்ட மனதுடன் கூடி இருந்தாள். அவ்விதம் இருக்கும்பொழுது சற்று நேரத்திற்கு பிறகு தன் னுடைய தேசாந்தரம் சென்றிருந்த கணவன் இறந்து விட்டதாக தந்தி மூலமாக ஸமாசாரம் தெரியவந்தது. அந்த விஷயத்தை யறிந்த ஜனங்கள் பரமாச்சர்யத்தை யடைந்தார்கள். இதனால்

यः सर्वज्ञः सर्ववित् यस्य ज्ञानमयं तपः ।

என்ற ச்ருதியில் ப்ரதிபாதிக்கப்படும் பரமேச்வரன் ப்ரக்ருதத்திலுள்ள பரமாசார்யாள் என்பது ப்ரத்யக்ஷம்.

அத்துடன் ஒவ்வொரு ஸம்வத்ஸரத்திலும் மாக சுத்த அஷ்டமியில், ஸமீபத்திலுள்ள ஒரு மலை மீது ஏறி ஆதி சங்கராசார்யாரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட வனதுர்கையை ப்ரக்ருதத்திலுள்ள பெரியவாள்தான் பூஜை செய்யவேண்டும் என்ற நியமத்திற்கு கட்டுப்பட்டு மலையில் பூஜை செய்வதற்கு பாதசாரியாக பெரியவாள்

சென்றார். போய்ச்சேரவேண்டி ஸ்தலமோ ரொம்பவும் கஹனமான ஸ்தலமானது - எந்த மனுஷ்யர்களும் அங்கு ஸஞ்சாரம் செய்யமுடியாது. அதே ரீதியாக மற்றொரு திக்கு மலையின்மீது காலபைரவரையும் மற்றொரு மலைமீது தர்மசாஸ்தாவையும, மற்றொரு ஸ்தலத்தில் ஆஞ்சநேயரையும் ஆதி சங்கரர் ப்ர திஷ்டை செய்து, சாரதா பீடாதிபதியான ஆசார் யாள்தான் ஸம்வத்ஸரத்தில் ஒரு நாள் பாதசாரியாகச் சென்று பூஜை செய்யவேண்டும் என்ற நியமத்தை ஆதி சங்கராசார்யாள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

அந்த நியமத்திற்கு உட்பட்டு இக்காலத்திலும் தற் காலத்திலுள்ள பெரியவாள் அந்தந்த விசேஷ தினத்தில் பாதசாரியாகச் சென்று பூஜை செய்து வருகிற வழக்கம் உண்டு. அதை அனுஸரித்து மாகசுத்த அஷ்டமி தினத்தில் வனதுர்கையை பூஜை செய்வதற்காக தற்கா லத்திலுள்ள ஆசார்யாள் போய்வரும் வழக்கம் உண்டு. போகக்கூடிய ஸ்தலமோ அடிவாரத்திலிருந்து வெகு தூரம் உச்சிக்கு போக வேண்டும்.

பர்மாசார்யாளை அனுஸரித்து ஏராளமான ஜனங் களும் பக்தியுடன் போகும் வழக்கம் உண்டு. போகிற மார்கத்திலோ ம்ருக பாதையை இவ்வளவுதான் என்று சொல்லமுடியாது. ஆகிலும் அன்று ஆசார்யாளை அனு ஸரித்து ஒரு விதமான ம்ருகத்தையும் ஒன்றுகாணமுடி யாது. தெரியாத ஜனங்கள் ஆசார்யாளை பின் கூர்ந்து செல்லாமல் கொஞ்சகாலம் முந்தியோ, பின்னரோ வன துர்கையின் தர்சனத்திற்கு செல்வதாயிருந்தால் கடோர மான ம்ருகத்தின் பாதையினால் போகும் ஜனங்களுடைய ஜீவதசைக்கு ஹானி ஏற்படுமோ என்று எண்ணக்கூடிய தாகவும் ஏற்படுகிறது. சிலருக்கு ஹானியும் ஏற்பட்டி ருக்கிறது. இதை பார்க்கும் ஜனங்களுக்கு ஆச்சர்யம் ஏற்படாமலிருக்க கூடுமா? ப்ரக்ருதத்திலுள்ள ஆசார்ய மூர்த்தி மஹா கைலாஸாதி பதியான பரமேச்வரன்தான் என்பதற்கு வேறும் அத்தாட்சி வேண்டுமா?

அத்துடன் ச்ருங்ககிரி மலைக்கு ஸமீபத்தில் மல்லி கார்ஜுன க்ஷேத்ரம் என்று ஒரு ஆலயம் இருக்கிறது. ஒரு மஹா சிவராத்ரி புண்ய காலத்தன்று அங்கு சென்று பெரியாள் சிவபூஜையை விமர்சையாக செய்து வந்தார்கள். 4-வது காலபூஜையில் புஷ்பாஞ்சலி போடும் சமயத்தில் மஹாலிங்கத்தை மார்க்கண்டேய மஹ ரிஷியைபோல் கட்டிக்கொண்டு ஆராதனம் செய்வதை ஸகல ஜனங்களும் பார்த்து அனுபவித்தார்கள். அந்த ஸந்தர்பத்தில் மல்லிகார்ஜுனலிங்கம் பேதித்து



मूले कल्पद्रुमस्य

என்ற சிவ பஞ்சாக்ஷர த்யானச்லோகத்தில் சொல் லியபடி சூலபாணியாக ஆவிர்பவித்து இந்த மஹா புரு ஷாளின் வ்யாஜமாக மற்றும் சில பக்தர்களுக்கு மஹா கைலாஸாதிபதியான பரமேச்வரனின் ப்ரத்யக்ஷதாசன மும் கிடைத்து. அபய முத்ரையினால் அபயப்ரதானமும் செய்து வர பரசு ம்ருக அபீதி ஹஸ்தம், என்று சொல் லியபடி பரமேச்வரனும் தன்கையில் அலங்காரமாக தரித்துகொண்டிருந்த மானையும், ப்ருக்ருதமான ஆசார் யாளுடைய கையில் கொடுத்து ஸ்ரீ மடத்திற்கு இதை ஒரு அலங்காரமாக வைத்து ரக்ஷித்து வரவேண்டும் என்று சொல்லிவிட்டு பரமேச்வரன் லிங்கத்தில் அந்தர்த் யானத்தை யடைந்தார். அந்த மானினுடைய பரம்பரை யாக வ்ருத்தியாய் பரம பஹுளமான இந்த கலியிலும் ஸ்ரீ மடத்திற்கு ஆசார்யாளை தர்சனம் செய்யப்போகிற வர்களுக்கு காணப்படுகின்றன. தற்காலத்திலுள்ள பெரியவாளைப் பார்க்கும்பொழுது அந்த மான் வணங்கி விட்டு விலகிக்கொள்கிறது. பெரியவாளின் ஸ்தானத் தில் பெரியவாள் அடிக்கடி அந்தர்முகாளாக ஆகும் கார ணத்தை முன்னிட்டு வெளியில் அந்த பீடத்தில் அபி ஷிக்தாளாயுள்ள அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள் அவர்களுடைய மடியில் வந்து படுத்துக் கொள்கிறது. மேல்மாடியிலுள்ள வேதாந்த வாசகசாலையில் அந்த மானின் ஸஞ்சாரம், தற்காலம் சென்று வருகிறவர்களும்

இக்காக்ஷியை அனுபவிக்கிருர்கள். இதை கண்ணுரும் ஜனங்களுக்கு பரமாசார்யாள் பரமேச்வரன்தான் என்று நிச்சயிக்க உபாயாந்தரங்கள் வேண்டுமோ!

தவிரவும்,

संगरप्रवृत्तवैरिभंगं ते नमः शिवाय

ஸ்ரீ சிவபஞ்சாக்ஷர நக்ஷத்ரமாலா ஸ்தோத்ரத்தில் பகவத் பாதாள் வர்ணித்திருக்கிருர்கள்.

அதற்கு அனுகுணமாக தற்காலத்திலுள்ள நமது பரமாசார்யாள் அவர்களிடம் ஒரு லீலேயும் பார்க்கலாம். கொஞ்ச காலத்திற்கு முந்தி உத்திர தேசத்திலிருந்து ஒரு பெரிய மஹா வித்வான் பஹு அஹங்காரத்துடன் ச்ருங்ககிரிக்கு வந்து நமது பெரியவரோடு கூட ந்யாய சாஸ்த்ரத்தில் வாகயார்த்தம் சொல்ல அட்ட ஹாஸம் செய்து கொண்டு எதிர்த்து வந்தார். அச்சந்தர்பத்தில் பெரியவர்கள் துங்கா நதிக்கு அக்கரையில் தனது ஸத்குருவான நரஸிம்ம பாரதி மஹாஸ்வாமிகளின் அதிஷ்டானத்தில் குருபக்தி கொண்டும், தனதுநித்யமான ஆந்ஹிகங்களே நடத்திக் கொண்டும், தன்னுடைய தரிசனத்திற்காக வரும் ஸஜ்ஜனங்களுக்கு மந்தஹாஸத்துடன் பரிபூர்ணமான அனுக்ரஹத்தையும் செய்து கொண்டும் பஹிர் முகாளாகதான் விளங்கி வந்தார்கள். அவ்விதம் இருக்கும் பொழுது உத்தர தேசத்திலிருந்து தர்க சாஸ்த்ரத்தில் தன்னேடு விஜிகீஷு கதையை அனுஸரித்து வாக்கியார்த்தம் சொல்லி ஜயகோஷத்துடன் ஸ்வக்கிராமம் செல்லவேண்டும் என்ற ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கும் அந்த வித்வானே அழைத்து துங்கா நதிக்கு மேல் கரையிலுள்ள மடத்தில் மேல் பாகத்தில் ஸபையை கூட்டி வாக்யார்த்தம் சொல்வதற்கு முயற்சி செய்தார்கள். வெளியில் இந்த விஷயம் ப்ரஸித்த மான காரணத்தால் பண்டித கோஷ்டிகளும் மற்ற ஜனங்களும் ஸபையில் வந்து அலங்கரித்து வந்தார்கள். வந்திருக்கும் அந்த வித்வானே பூர்வபக்ஷ கோடியை

சொல்லும்படி கேட்டுக் கொண்டார்கள், அந்த வித்வானும் ஆசார்யாளுக்கு வந்தனாதிகள் உபசாரங்கள் யாதொன்றையும் செய்யாமல் மிகவும் அஹந்தையோடு பூர்வ பக்ஷ கோடியை தான் சொல்ல ஆரம்பித்தார். சதுர்த்தச லக்ஷணி என்ற காதாதரீயர் க்ரந்தத்திலுள்ள

यत् समानाधिकरणाः साध्यतावच्छेदकावच्छिन्नव्यापकता-ऽवच्छेदकाः प्रतियोगि समानाधिकरणाः तत्वं

என்ற ப்ரதம ஸ்வலக்ஷணத்தை ஆரம்பித்து இந்த லக்ஷணத்தில் ஸமானாதிகரண தர்மவச் சின்ன ப்ரதியோகிதாக அபாவத்தை உபாதானம் செய்து கொண்டே லக்ஷண ஸமந்வயம் ஸுகரமாக செய்யக் கூடுமே.

व्यधिकरणधर्मावच्छिन्न प्रतियोगिताक अभाव पर्यन्तानुधावनं

ஸ்வாமிகள் செய்திருப்பது வ்யர்த்தம்தான் என்று ரொம்பவும் உத்கோஷத்துடன் ந்யாய பூர்வமாயும் உதாஹரண பூர்வகமாயும் ஸிம்ம நாதம் போல் கர்ஜித்து கொண்டு தனது பூர்வ பக்ஷத்தை அந்த வித்வான் ஸமர்தனம் செய்தார். நமது பெரியவாளோ அந்தர்த்ருஷ்டியோடு கூட மந்தஹாஸம் செய்து கொண்டு அந்த ஸபையில் பாடக சாலையில் ஒரு சிறிய வித்யார்த்தியை த்ருஷ்டியினால் கொஞ்ச நேரம் இமை கொட்டாமல் பார்த்து வந்தார். அந்த வித்யார்த்தியோ அந்த காலத்தில் 14 வயதுக்கு உட்பட்டவனாகத்தான் இருந்து கொண்டு மகா காவ்யத்தில் 2-வது ஸர்கம் வாசித்துக் கொண்டு வந்தான். நியாய சாஸ்த்திரத்தில் அம் மாணவனுக்கு வாஸனையே இல்லை. இவ்விதம் மஹான்களுடைய த்ருஷ்டி ஏற்பட்ட காரணத்தால் சாக்ஷுஷ தீக்ஷையினால் தீக்ஷிதனாக அம்மாணவன் ஆகி எதிர் வாதியினால் சொல்லபபட்ட பூர்வபக்ஷ கோடியை அனுவாதம் செய்த அழகை மஹா கைலாஸாதி பதியான பரமேச்வரன் தான் பார்த்து ஆனந்திக்க வேண்டும்.

नत्वा यत्पदयुगमं वाचस्पति गर्वहारि वाक् ततयः ।
प्रभवन्ति हि भुविमूकाः तमहं प्रणमामि शंकराचार्यम् ॥

என்ற வசனத்தை யனுஸரித்து ப்ருஹஸ்பதி பகவான்கூட அந்த மாணவன் ஸந்நதியில் சாஸ்த்ரத்தை ப்ரவசனம் செய்ய ஸமர்த்தராக ஆகுவரோ என்று சகல ஜனங்களும் ஸந்தேஹிக்கும்படி நேர்ந்துவிட்டது. நியாய சாஸ்திரமான தால் அதில் ச்ரோத்ரு ஜனங்களுக்கு அந்த சாஸ்திரத் தில் அப்பியாஸமில்லாவிடில் சாப்த்போதம் ஏற்படுவது கஷ்டந்தான். ஆகிலும் அங்குள்ள ஜனங்கள் இம்மாணுக் கனின் வாக்விலாஸத்தைக் கேட்டு ப்ரமானந்தத்தை யடைந்த பெருமையை நேரில் பார்த்தவர்கள்தான் அனு பவிக்க முடியுமன்னியில் வேறு ப்ரகாராமாக வர்ணிக்க முடியாது. இந்த சந்தர்ப்பத்தில் நமது பெரியவாள் மந்த ஹாஸத்துடன் மௌனமாகவே இருந்து வந்தார்கள். அம் மாணுக்கன் அந்த வித்வானுல் சொல்லப்பட்ட பூர்வ பக்ஷ கோடிக்கே உத்திதி இல்லை என்பதை அவயவச: கண்ட னம் செய்து பூர்வ பக்ஷ காலத்தில் அந்த வித்வான் சொன்ன அநேக நியாயங்களுக்கு வ்யபிசார தோஷத்தை யும் ப்ரதர்சனம் செய்து, கூறிய உதாரணங்களெல்லாம் பொருத்தமற்றன என்பதை ப்ரத்யக்ஷமாய் ப்ரகாசம் செய்து வைத்து கதாதர பட்டாசார்யாளரால் இயற் றப்பட்ட சதுர்தசலக்ஷிணி என்ற க்ரந்தத்தில் ப்ரதம ஸ்வலக்ஷணத்தில்

समानाधिकरण धर्मावच्छिन्न प्रतियोगिताक

அபாவத்தை ஸ்விகரித்துக் கொண்டு லக்ஷண ஸமன் வயம் செய்ய ஸாத்யமில்லை என்று

व्यधिकरण धर्मावच्छिन्न प्रतियोगिताक अभावपर्यन्तानुधावन

த்தை கதாதர பட்டாசார்ய ஸ்வாமிகள் அவர்கள் செய்தது தான் ஸாது என்றும் ஸித்தாந்தம் சொல்லி எதிரியை அம்மாணவன் பங்கப்படுத்தினன். அதை அனுஸரித்து தான்

संगरप्रवृत्त वैरि भंगं ते नमःशिवाय

என்று நமது பகவத் பாதாள் தானியற்றிய சிவ பஞ்சாக்ஷர நக்ஷத்ரமாலிக ஸ்தோத்ரத்தில் சொல்லியிருக்கிறார்களோ என்று தோன்றுகிறது. அந்த வித்வானே அபஜயத்தை யடைந்த பிற்பாடு அந்த மாணுக்கன் சொல்லியதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் பெரியவாளை நோக்கி தங்களோடு நான் வாக்யார்த்தம் சொல்ல வந்தேனே தவிர இந்த வித்யரார்த்தியுடன் பேச வரவில்லை. ஆகையால் நான் செய்த பூர்வ பக்ஷகோடிக்கு தாங்கள் தான் பதில் சொல்லவேண்டும் என்று வர்புருத்தினன், பெரியவாளும் மந்த ஹாஸத்துடன்

माणवकोक्तिः समाधीयतां पश्चात वयं वक्ष्यामः

என்று சொல்லி மௌனமாக இருந்துவிட்டார்கள். வித்வானும் பிறகு பெரியவாளுக்கு வந்தனம் செய்துவிட்டு ஸ்வக்ராமம் சென்று விட்டார். இவ்விதம் நமது பெரியவாள் சாக்ஷுஷ தீக்ஷையினுல் தன்னுடைய வைதுஷ்யத்தை சிஷ்யனுடைய ஹ்ருதயத்தில் அபரோபணம் செய்யும் சக்தியுள்ள ராஜயோகி என்று சொல்ல வேறு அத்தாட்சி வேண்டுமா? காலக்ரமமாக அம்மாணுக்கனுக்கு தான் என்ன சொன்னோம் என்ற ஞாபகமும் இல்லாமல் போய்விட்டது. அந்த மாணுக்கன் தான் பரமாசார்யாளாய் தன்னுடைய ஸ்தானத்திற்கு அர்கமான ப்ரும்மசாரி என்று தேர்ந்து எடுக்கப்பட்டு ஜகத்குருவான பரமாசார்யாளுடைய ஸ்தானத்தில் அபிஷிக்தாளாக ஆகி தற்காலத்தில் குரு பக்தியுடன் சின்ன ஸ்வாமிகள் என்ற பெயரால் விளங்கி வருகிறார்கள்.

தவிரவும் தற்காலத்திலுள்ள பெரியவாள் அன்னியர்களுக்கு ஸ்ரீவித்யை என்ற ஆத்ம வித்யையை உபதேசிப்பது மிகவும் துர்லபம். அநேக புண்ய ஜனங்களுக்குள்

यदि वा पश्चिमं जन्म यदि वा शंकरस्स्वयं ।
तेनैव लभ्यते विद्या श्रीमत्पञ्चदशाक्षरी ॥

என்ற சாஸ்திரத்தை அனுஸரித்து மறுபடியும் ஜன்மாவுக்கு காரணமான கர்மா இல்லாமலாவது இருந்திருக்க வேண்டும்: அல்லது புண்ய பாபவிலக்ஷணமான பரமேச்வரனுடைய அம்ச அவதாரமாகவாவது இருக்க வேண்டும்

அவ்விதம் உள்ள

मनुष्याणां सहस्रेषु कश्चित् यतति सिद्धये । यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्वतः ॥

என்ற பகவத் கீதா வாக்யத்தை பொட்டி மஹா புண்யவானன உத்தம சிஷ்யனுக்குத்தான் இந்த மஹா வித்யையை உபதேசம் செய்யும் வழக்கம். இவ்விதம் ஒரு புண்ணியவான் வெகு தூர தேசத்திலிருந்தும் 4 தடவை மார்க ச்ரமத்தை வகித்துக்கொண்டு பெரியவாளிடத்தில் இந்த ஸ்ரீ வித்யையை உபதேசித்துக் கொள்ள வேண்டுமென்ற எண்ணத்துடன் வந்து பெரியவாளே தரிசனம் செய்து, அவாளிடம் தனது ப்ரார்த்தனையையும் விக்ஞாபனம் செய்துகொண்டு காத்துக் கொண்டிருந்தார். அநேக தினங்களாகியும் வித்யா லாபத்தை யடையாமல் மனோ வருத்தத்துடன் சிரமப்பட்டு வந்த சிஷ்யன் ச்ருங்ககிரியில் வஸித்துக்கொண்டு இருந்தார். மூன்று தடவைகளில் உபதேசம் நடை

பெருமல் திரும்பியே ஸ்வதேசம் செல்லும்படி நேர்ந்துவிட்டது. ஆகிலும் 4-வது தடவை பெரியவாளுடைய ஸந்நதியில் சென்று தன் ப்ரார்த்தனையை தெரிவித்துக்கொண்டார். அச்சந்தர்ப்பத்தில் இந்து சிஷ்யனின் புண்ணிய பரிபாகத்தால் பெரியவாளுடைய முகார விந்தத்திலிருந்தும் அம்ருத ஸ்ராவியான ஒரு வாக்கு எழும்பி ப்ரகாசித்தது. அதாவது உமக்கு எப்பொழுதாவது சென்ற காலத்தில் காலடி மஹா க்ஷேத்திரத்தில் எங்கள் குருவான பெரியவாள் மூலமாக பஞ்சதசி யென்ற மஹா மந்த்ர உபதேசம் ஆகி இருக்கிறதா, பரிபூரணமாக அங்க கலாபங்களை தெரிந்து கொள்ள நீங்கள் பிரார்த்தித்துக் கொண்டதிலிருந்தும், காலாந்தரத்தில் மற்ற ஒரு ரூபமாக நான் ஆவிர்பவித்து இருக்கும்பொழுது உமக்கு இந்த வித்யையை பரிபூர்ணமாக உபதேசம் செய்கிறேன் என்றது அந்த அம்ருத வாக்கின் ஸ்வரூபமாகும். இதைக்கேட்ட இந்த சிஷ்யன் அம்ருதபானம்செய்த மஹான்களுடைய அனுபவத்தை அடைந்ததுபோல் திருப்தியடைந்து சந்தோஷத்தையனுபவித்தான். இந்த சிஷ்யனே பெரியவாளுக்கு பதில் சொல்லியதாவது நான் சிதம்பரக்ஷேத்திரத்தில் மன்னார்குடி பரம்பரையைச் சேர்ந்த பெரியவாளிடம் வேதாந்த வித்யையை அப்யாஸம்செய்து வரும்காலத்தில் இந்த காலடி மஹா புண்ய க்ஷேத்திரத்தில் லோக குருவான ந்ருஸிம்ம பாரதி மஹா ஸ்வாமிகள் அவர்களால் ஆதிசங்கர பகவத் பாதாள் அவர்களின் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு மஹாகும்பாபிஷேகம் மிகவும் விமரிசையாக நடைபெற்றது. அதற்கு அங்கமாக வித்வத்ஸபை மிகவும் அழகாய் நடந்துகொண்டிருக்கும் நிமித்தமாக சிதம்பர க்ஷேத்திரத்தில் வஸித்துவந்த எனது வித்யா குருவும் ஸபைக்கு அலங்காரமாக அங்க பூதராக அமர்ந்திருந்தார்கள். நான் அந்த ஸந்தர்ப்பத்தில் வித்யா குருவுக்கு பரிசர்யை செய்துகொண்டு சிஷ்ய பாவத்துடன் வந்ததுண்டு. வித்யார்த்திகளின் கோடியில்

ஒவ்வொரு வித்யார்த்தியும் ஒவ்வொரு அதிகரணத்தில் வாக்யார்த்தம் சொல்லும்படி பாரதி மஹா ஸ்வாமிகள் ஆக்ஞாபித்திருந்தார்கள். அதில் எனக்கும் அனுக்கிர ஹம் கிடைத்தது.

अन्तस्तद्धर्मोपदेशात्

என்ற அதிகரணத்தில் பூர்வபக்ஷ ஸித்தாந்த கோடிகளை சொல்லுமபடி ஆக்ஞாபித்திருந்தும் மஹாஸ்வாமிகள் அவர்கள் பரம ஸந்தோஷத்துடன் அந்த சிஷ்யனுக்கு பரம அனுக்ரஹத்தை செயதார்கள். மஹா ஸபையில் மஹா ஸ்வாமிகள் அவர்களே 'வித்யார்த்தி' என்று ஸம் போதனம் செய்து வாக்யார்த்தமானது மிகவும் ஸமாஞதி கரணமாகவும் அழகாயுமிருந்து வருகின்றன. மற்ற வித் தியார்த்திகளைப்போல் திரவ்யாபேக்ஷை உண்டா அல்லது வாக்தேவதையான சாரதாம்பாளுடைய அனுக்ரஹம் போ துமா என்று பஹிரங்கமாக கேட்க அந்த வித்தியார்த்தி யின் பூர்வ புண்ணிய பரிபாகத்தால் திரவ்யாபேக்ஷை எனக்கில்லை, பெரியவாளுடைய அனுக்ரஹ விஷேத்தால் வித்யா அதிதேவதையான சாரதாம்பாளின் அபாங்க வீக்ஷ ணம் எனக்கு கிடைத்தால் போதும் என்று சொல்லிக் கொண்டு அந்த வித்யார்த்தி அச்ரு பூர்ண நயனஞக ப்ரார்த்தித்து கேட்டுக் கொண்டான். பாரதி மஹா ஸ்வாமி கள் அவர்களும் பூர்ணு நதியில் அந்த வித்தியார்த்தியை ஸ்நானம் செய்து வர ஆக்ஞாபித்து விட்டு உடன் ஸ்ரீ மத் பஞ்சதராக்ஷரி என்ற மஹா வித்யையை ஆதிசங்கர பகவத் பாதாள் அவர்களுடைய மாதாவின் ஸமாதிக்கு எதிரில் உபதேசம் செய்தார்கள். அந்த வித்யார்த்தியின் ஸந் தோஷத்தை அளவிடமுடியாது. பிறகும் அந்த வித்யை யின் பூர்வாங்க உத்தராங்கங்களை பரிபூரணமாக தெரிந்து கொள்ள விரும்பினுன். அந்த சந்தர்பத்தில் மற்றொரு சரீரத்தில் நான் ஆவிர்பவித்திருக்கும் காலத்தில் பூர்த்தி

செய்துவிடுகிறேன் என்று ஆக்ஞை ஏற்பட்டது, என்ற தை தற்காலத்தில் லோக குருவாக விளங்கிவரும் பெரிய வாளிடம் ப்ரக்ருதத்தில் மஹாவித்யையை அபேக்ஷிக்கும் புண்ணியவான் தெரிவித்துக்கொண்டான். இதை கேட்ட பெரியவாளும் பரம சந்தோஷத்தை யடைந்து உமக்கு பூர்வ ஸம்பந்த மில்லாதிருந்தால் இவ்விதம் ப்ரவிருத்தி யேற்பட நியாயமில்லை. ஸ்வப்பனு வஸ்தையில் நானும் இந்த வ்ருத்தாந்தத்தை யறிந்தேன். ஆகையால் இந்த ப்ரஸ்தானத்தில் உமக்கு உபதேசம் செய்துவிடுகிறேன். நாளை காலை துங்கா நதியில் நித்யாஹ்நிகத்தை முடித்துக் கொண்டு வந்து சேரலாமென்று ஆக்ஞாபித்தார்கள். உடன் அந்த புண்யவானும் மறுதினம் காலையில் விதிவத் தாக ஸ்நாநம் முதலிய ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு துங்கா நதிக்கு அக்கரையில் ஸ்ரீ மடத்தில் பெரியவாளின் ஸந்நதியில் சென்று ச்ரத்தா பக்தியுடன் ப்ரணிபாதம் முதலிய உபசாரங்களால் ஆசார்ய மூர்த்தியை திருப்தி செய்து வைத்தார். இவர் கொண்டு சென்ற தேங்காய் பழங்களைக்கூட கொண்டுவரக்கூடாதென்று ஆக்ஞாபித்து விட்டார்.

அந்தஸ்ரீ மடத்தில் மேல்மாடிக்குப் போகும் மார்க் கத்தினருகில் ஏகாந்தமாக பெரியவாள் ஸமாதியிருக்கக் கூடிய உள்பாகம் இருந்து வருகிறது. அதில் பெரியவாள் அமர்ந்திருந்தார்கள். அந்த உள்ளானது கதவு தாப்பா ளிடாமல் சாத்தப்பட்டிருந்தது. இந்த உபதேசத்திற்காக சென்ற ப்ராம்மணனை பெரியவாள் உள்பாகத்துக்கு வரும் படி ஆக்ஞாபித்தார்கள். உடனே இந்த ப்ராம்மணன் உள்ளே சென்று பெரியவாளுக்கு வந்தனங்களை செய்து விட்டு நின்று வருங்காலத்தில் கதவை தாப்பாளிடும்படி ஆக்ஞாபித்தார்கள். அந்த ஸந்தர்பத்தில் பெரியவாளுக்கு எதிரில் ஒரு ஸுவாஸினியம்மாள் ஸர்வாலங்கார பூஷிதையாக சுமார் 18 வயதிற்கு மேற்படாத பர்வத் தில் ஸ்படிகமணிமாலையை தரித்துக் கொண்டு வந்தாள்.

இந்த சிஷ்யனுக்கு தற்காலத்தில் ச்ருங்ககிரியில் பெரிய வாள் ஸ்திரி ஜாதியை கண்ணால்கூட பார்க்கமாட்டார்கள்.

न रामः परदारान्वै चक्षुर्भ्यामपि पश्यति

என்று ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியைபோல் ப்ரும்மசர்யத்துடன் இருந்து வருகிறவர்கள் என்ற ப்ரஸித்தி லோகத்தில் ஏற்பட்டு வருங்காலத்தில் அதற்கு நேர் விபரீதமாக ப்ரக்கிருதத்திலிருந்து வருகிறதேயென்ற தோற்றம்மனதில் உண்டாயிற்று. ஆனால் ஒன்றையும் வெளியில் ப்ரகாசம் செய்யவில்லை. பெரியவாளும் யாதொன்றும் சொல்லவில்லை. அருகில் இந்த சிஷ்யனை உட்காரவைத்து உபதேசம் மாத்திரம் செய்தார்கள். உபதேச காலத்தில் பெரியவாள் கமண்டுவிலிருந்து இந்த சிஷ்யனுக்கு ஆபாத தன மஸ்தகம் தீர்த்தத்தினால் ப்ரோக்ஷணம் செய்து வைத்துவிட்டு தனது அபய ஹஸ்தத்தால் இந்த சிஷ்யனுக்கு நியாஸ மந்திரங்களை உச்சரித்துக்கொண்டு தீக்ஷை செய்துவிட்டு கட்க மாலா மஹா மந்திரத்தையும் உபதேசம் செய்யும்பொழுது இந்த சிஷ்யன் குருத்யானத்தில் ஈடுபட்டு மூடின கண்களுடன் சுமார் ஒரு முகூர்த்த் காலம் இருந்து வந்தான். பிறகு உபதேசங்கள் பூர்த்தியான பின் வந்தனோபசாரங்களை செய்து விட்டு பத்தாஞ்ஜலி புடனாக இருந்துவரும் காலத்தில் உபதேசத்தின் முன்தான் பார்த்துவந்த ஸ்த்ரீயை உபதேசத்திற்கு பிறகு காணப் படவில்லை. ஆகிலும் கதவு தாப்பாளிடப்பட்டிருந்தது. யார் கதவை திறந்தது எப்படி அந்த ஸ்த்ரீ சென்றாள் என்ற விஷயத்தை தெரிந்துகொள்ள ஆவலுடன் பரமாசார்யாளின் பாதத்தை தொட்டு ப்ரணமம் செய்து இந்த ஆச்சர்யத்தை தெரிவிக்கும் பொழுது ஆசார்யாளின் வாக்கிலிருந்து பரமாசார்யாளுடைய பெருமை உமக்கு இன்னமும் புரியவில்லையா. மண்டன மிச்சரரின் தர்மபத்னியாக அவதரித்திருக்கும் 'வாணி' என்ற ஸரஸ்வதி தேவியை தான் ஜயித்த பிற்பாடு இந்த பூலோகத்திலேயே அந்த பராம்பி

கையை ப்ரதிஷ்டை செய்ய வெண்டுமென்ற ஆவலுடன் வாக் தேவதையை ப்ரார்த்திக்கொள்ளும் பொழுது ஸரஸ்வதியும் அதற்கிணங்கி ஆசார்யாளை தாங்கள் முன்பு போகலாம், நான் துடர்ந்து வருகிறேன். எந்த இடத்தில் எனக்கு ரமணியமான தேசம் என்று தோன்றுகின்றதோ அந்த இடத்தில் என்னை ப்ரதிஷ்டை செய்யலாம் என்று சொல்லிவிட்டு ஆசார்யாளை யனுஸரித்து வாக் தேவதையும் பின் துடர்ந்து சென்றாள். இந்த க்ஷேத்திரத்தில் வந்தவுடன் இந்த ப்ரதேசம் நிர்வைரமான ப்ரதேசமென்று வாக் தேவதையின் புத்தியில் பட்டதிலிருந்தும் இந்த ப்ரதேசத்திலேயே ப்ரதிஷ்டை செய்துவிடும்படி வாக் தேவதையின் ஆக்ஞைக்கிணங்கி ஆசார்யாள் சாரதாம்பாளை ப்ரதிஷ்டை செய்திருக்கிறார்கள். அந்த சாரதாம்பாள் என்ற வாக் தேவதையை ஆசார்ய பரம்பரையில் உள்ள ஸந்யாஸிகள் ப்ரத்யக்ஷமாக தர்சனம் செய்து அந்த அம்பிகையின் உத்திரவை யனுஸரித்துத்தான் சிஷ்ய ஜனங்களுக்கு வித்யோபதேசம் செய்யும் வழக்கம். ஆகையால்தான்

## शारद्धानप्रतिष्ठतां

என்ற திருநாமதேயம் விளங்கி வருகிறது என்று தெரிவித்தார்கள். ஆயைால் இமமஹாமந்த்ரராஜத்தை, தாங்கள் ஸ்வீகரிக்க அர்ஹதையை அம்பாள் மூலமாக தெரிந்து கொள்ள தேவியை ப்ரார்த்தித்தவுடன் பராம்பிகையும் உமக்கு பரிபூரணனுக்ரஹத்தைச் செய்ய ப்ரத்யக்ஷமாக ப்ரகாசித்து வந்தாள். உபதேசமானபின் அந்தர்த்யானத்தை யடைந்தாள். பராசக்தியான பரதேவதையின் ஆவிர்பாவதிரோதானத்திற்கு ப்ராக்ருதமான கதவுகளின் அபேக்ஷயில்லை என்று தெரிவித்தார்கள்.

முன் சொல்லியபடி தற்காலத்தில் ச்ருங்ககிரி மஹாக்ஷேத்திரத்தில் விளங்வரும் பெரியவாள் ஸர்வலோக குரு

வானதால் அவாளுடைய மஹிமையை யாராலும் இவ்வளவுதான் என்று வர்ணிக்க முடியாது. மஹா கைலாஸாதிபதியான பரமேச்வரனே ஸத்குரு ரூபமாக இந்த புண்ய பூமியில் அவதரித்திருக்கிறார் என்று தெரியவருகிறது.

जन्मानेकशतैः सदादरयुजा भक्त्या समाराधितो
भक्तैः वैदिकलक्षणेन विधिना सन्तुष्टः ईशः स्वयम् ।
साक्षात् श्रीगुरुरूपमेत्य कृपया दृग्गोचरस्सन् प्रभुः
तत्वं साधु विबोध्य तारयति तान् संसारदुःखार्णवात् ॥

என்று பகவத்பாதாளுடைய ஸூக்தியை யனுஸரித்து இப்புண்ய பூமியில் அநேக மஹான்கள் ஆயிரக்கணக்கான அநேக ஜன்மாக்களில் அக்னி ஹோத்ரம் முதலான ஸத்கர்மாக்களை கர்த்ருத்வாபிமானமில்லாமலும், பலாபிஸந்தி யில்லாமலும் ஈச்வர ஆராதன ரூபமாக அனுஷ்டித்து வந்த காரணமாக அதிலும் ஆதரவோடும், பரம பக்தியோடும்

क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा

என்று சொல்லியபடி அனுஷ்டித்த பெருமையை முன்னிட்டு அந்த கர்மாக்களெல்லாம் அபூர்வமாக பரிணமித்து மஹா கைலாஸத்தில் பரமேச்வருடைய ஸந்நிதியில் ஏராளமாகப் போய் குவிந்து கிடந்தன. பரமேச்வரன் கருணாமூர்த்தியானதால் பூலோகத்திலுள்ள ஸத்புருஷாளால் அனுஷ்டிக்கப்பட்டு அபூர்வமாக பரிணமித்து கூட்டங்கூட்டமாக விளங்கிவரும் புண்ய கர்மாக்களைப் பார்த்து பரமானந்தத்துடன் இந்த கர்மாக்களை யனுஷ்டித்து வந்த புண்ய ஜனங்களுக்கு நாம் என்ன ப்ரதி செய்கிறதென்று ஆலோசித்தார்.

स्मरतः पादकमलं आत्मानमपि यच्छति ।
किन्वर्थकामान् भजतः नात्यभीष्टान् जगद्गुरुः ॥

என்று பக்தாள் தன்னை ஸ்மரித்த மாத்திரத்தில் பக்தர்களுடைய எதிரில் பரிபூர்ணமாக ஸாந்நியத்தை யடைந்து அனுக்ரஹம் செய்ய விருக்கும் பகவான் ஸம்ஸார பந்தத்திற்கு காரணமான அர்த்தகாமங்களை பக்த ஜனங்களுக்குக் கொடுப்பதில் பகவான் த்ருப்தியடைய மாட்டார். தன்னை யண்டினவனுடைய அபிவேகத்தை யனுஸரித்து சிலர்களிடம் அர்த்தகாமங்களை பகவான் கொடுப்பவராஞலும் உண்மையான பக்தனிடம் அந்த அர்த்தகாமங்களை பந்தத்துக்கு ஹேதுவானதிஞலும். பக்திக்குத் தகுந்த வெகுமானம் போதாதாலும் அர்த்த காமங்களை கொடுப்பதில்லை. புண்ணிய பூமியிலுள்ள மஹா ஜனங்களுடைய வேதோக்தஸத்கர்மாக்களுக்கு பொருளும் காமமும் ஸமானமான பலமாக ஆகாது என்று தீர்மானித்து ஜன்ம மரண ரூபமான ஸம்ஸாரஸாகரத்தில் அநேக காலமாக முழுகிக்கொண்டு துக்கத்தை யனுபவிப்பவர்களுக்கு அந்த துக்கத்தை நாம் நிவர்த்தி செய்து ஸம்ஸார பந்தத்திலிருந்தும் விமுக்தர்களாக செய்து வைப்பதுதான் நமது கடமையென்று தீர்மானித்து பரமஸந்தோஷத்துடன் ஸாக்ஷாத் பரமேஸ்வரனே புண்ய பூமியில் ஸ்ரீ சங்கர பகவத் பாதாளுடைய ரூபமாக அவதாரம் செய்து கருணையிஞல் ப்ராணிகளுடைய த்ருஷ்டிக்கும் விஷயமாக ஆகும்படி தன்னுடைய மங்கள விக்ரஹத்தை செய்துகொண்டு ஸம்ஸார ஸாகரத்திலிருந்தும் புண்ணியவான்களை கரையேற்றிவிட ச்ரேஷ்டமான தத்வங்களையும் பலவிதமாக அநேக உதாஹரணங்களோடுகூட சுலபமான நடையில் ப்ராணிகளும் அநாயாஸமாக கிரஹிக்கும்படி பல தடவைகளில் உபதேசித்து பரிஹரிக்க தகாததான துக்கானுபவத்தை கொடுத்து வரும் ஸம்ஸார ஸாகரத்திலிருந்து புண்யவான்களை கரையேற்றி விடுகிருர்கள். ப்ராணிகள் செய்த புண்யகர்மா

னுல் சந்தோஷத்தை யடைந்த பரமேச்வரன் ஸத்குரு ரூபமாக உருவத்தை யெடுத்துக்கொண்டு பவபந்தத்தி லிருந்தும் புண்ய ஜனங்களை கரையேற்றி விடுகிறதென் பதுதான் பரம சந்தோஷத்துடன் த்ருப்தியோடு பகவான் கொடுக்கும் உயர்ந்த பலமாகும். அவ்வித முள்ள பரம குருக்களுடைய வ்ருத்தாந்தங்களை இவ்வளவுதான் என்று யாரால்தான் வர்ணிக்கமுடியும்.

दृष्टान्तो नैव दृष्टः त्रिभुवनजठरे सद्गुरोः ज्ञानदातुः

स्पर्शश्चेत् तत्र कल्प्यः स नयति यदहो स्वर्णतामश्मसारम् ।

न स्पर्शत्वं तथापि श्रितचरणयुगे सद्गुरुः स्वीयशिष्ये

स्वीयं साम्यं विधत्ते भवति निरुपमः तेन वाऽलौकिकोपि ॥

என்ற ப்ரகாரம் ஸ்ரீ சங்கரபகவத் பாதாளே தனக்கு ப்ரம்மோபதேசம் செய்த தனது குருவை ஸ்ரீ கோவிந்த பகவத் பாதாளை வர்ணித்து அதை யொரு கிரந்தமாக செய்ய முயன்றததுண்டு. யாருக்கு ஸமானமாக தனது குருவை வர்ணிக்கலாமென்று தேசம் தேசமாக ஸஞ்சாரம் செய்வதென்ற வ்யாஜத்தால் தனது குருவுக்கு ஸமானமான த்ருஷ்டாந்தமாக ஒரு வஸ்துவை கண்டு பிடிக்கவேண்டுமென்று மூன்று லோகங்களிலும் ஸஞ்சாரம் செய்து தேடினுர். தனக்கு ஸத்ரூபமான ப்ரும்மத்தை உபதேசித்த ஸத்குருவான ஸ்ரீ பூஜ்ய கோவிந்த பகவத் பாதாளுக்கு ஸமானமான த்ருஷ் டாந்தமே யகப்படவில்லை. ஆனுல் ஸ்பரிசத்தை த்ருஷ் டாந்தமாக சொல்லக்கூடாதா என்ற ஆசங்கை ஏற் பட்டது. ஸ்பரிசம் என்பது ஒரு பாஷாண விசேஷம். அக்கல்லுக்கு மனச்சிலை என்ற பெயருண்டு. அப் பாஷாண விசேஷத்திற்கு தன்னிடத்தில் ஸம்பந்தப்பட்ட இரும்பை ஸ்வர்ணமாக செய்யும் சக்தியுண்டு. அதுபோல் ஸத்குருக்கள் தன் சிஷ்யனை லோக பூஜ்யனுகச் செய்கிருர்

களென்று ஏன் சொல்லக்கூடாது. ஸ்த்ரூபமான ப்ரும்மத்தை உபதேசித்த ஸத்குருக்களுக்கு இரும்பை தங்கமாக்கும் ஸ்பர்சத்தை உதாரணமாக சொல்லக்கூடாதா என்ற சங்கையேற்பட்டாலும் அதுவும் ஆசார்யாளுக்கு த்ருப்திகரமாகவில்லை. ஸ்பர்சம் என்ற பாஷாண விசேஷத்திற்கு தன்னிடம் ஸம்பந்தப்பட்ட இரும்பை ஸ்வர்ணமாகச் செய்துவிடுவதென்பது உண்மைதான்; ஆனாலும் தன்னுடை ஸாமர்த்திய விசேஷத்தை அந்த இரும்புக்கு உண்டுபண்ணுகிறதில்லை.

ஸத்குருவோ தன்னுடைய சரணாரவிந்தத்தை ஆஸ்ரயித்த சிஷ்யனுக்கு தன்னுடைய ஸாமர்த்திய விசேஷத்தையே கொடுத்துவிடுகிறார். தன் சிஷ்யனை எவ்விதம் பவபந்தத்திலிருந்து விடுவிக்க செய்தாரோ அவ்விதம் தன் சிஷ்யனும் அவனை யண்டிய சிஷ்யனை பவபந்தத்திலிருந்து விமுக்தனாக செய்விக்கும் சக்தி உண்டாகிறது. ஆகவே ஸ்பர்சமும் த்ருஷ்டாந்தமாகாது. ஆனால் லோக விலக்ஷணன ஈச்வரனையே ஸத்குருவுக்கு த்ருஷ்டாந்தமாச் சொல்லக்கூடாதா வென்று நினைக்கலாம். அதுவும் சரியல்ல. லோக விலக்ஷணமான ஈச்வரனே ப்ராணிகளுடைய புண்ய பரிபாகத்தால் ஸத்குருவாக அவதரித்திருக்கிறதாக முன்பு சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ஈச்வரனுக்கு ஈச்வரனையே த்ருஷ்டாந்தமாக சொன்னதாக ஆகும். அனுபமாலங்காரம் என்ற தோஷம் ஏற்படுமென்று பகவத் பாதாளே ஸத்ரூபமான ப்ரும்மத்தை யுபதேசம் செய்த ஸத்குருக்களுக்கு த்ருஷ்டாந்தமாகப் படாததால் அவர்களுடைய பெருமையை வர்ணிக்க முடியாதென்று உபரதியை யடைந்திருக்கும்பொழுது ப்ராக்ருத மனிதர்கள் எவ்விதம் வர்ணிக்கமுடியும். ப்ரக்ருதத்திலுள்ள ஆசார்யாளோ ஸத்குருக்களுக்கும் ஸத்குருவாக இருந்துவரும் பொழுது அவாளுடைய பெருமையை ஒரு மனிதன் வர்ணிக்க முன்

வருவதுபோல் ஸாஹஸமான கார்யம் வேறொன்றில்லை. உபரதியடைவதுதான் புத்திமான்களுக்கு அழகாகும்.

जयतु गुरुवरोऽसौ चन्द्रशेखरभारती
स्फुरतु मम पुरस्तात् चन्द्रशेखरभारती ।
वदतु तत्वसारं नः चन्द्रशेखरभारती
ददतु मयि कटाक्षं चन्द्रशेखरभारती ॥

---

ௐ

# ஸ்ரீ சாரதா பீட விமர்சனம்.

ஸர்வ லோகேச்வரியான பராம்பிகையினுடைய பரி பூர்ணமான ஸாங்நியத்தை ஸுக்ருதிகளான ஜனங்கள் அடைவதற்குக் காரணமாக இந்த புண்ய பூமியில் ஆங் காங்கு ஜகதீச்வரியினுடைய பீடங்கள் 'பஞ்சாசத்பீடமண் டிதா' என்ற ந்யாயத்தை அனுசரித்து ஐம்பது பீடங்கள் ஸ்ரீதேவி பாகவத ரீதியாக தற்காலத்தில் விளங்கிவருவதா கத் தெரியவருகின்றது. அந்த பீடங்களுக்குள் ரிஷ்யச்ருங்க மஹர்ஷியினுடைய ஆச்ரமத்தில் துங்கா என்ற புண்ய நதியினுடைய தீரத்தில் ஸ்ரீ சாரதா பீடமென்று உயர்ந்த ப்ரம்ம வித்யைக்கு ஸ்தானமான பீடமொன்று விளங்கி வருகின்றதென்பது வித்யாரண்யர்களால் இயற்றப்பட்ட மாதவீய சங்கரவிஜயம் மூலமாகத் தெரிய வருகின் றது. அந்த ஸ்தானத்தில் அமர்ந்துவரும் ஒவ்வொரு மடாதிபதிகளும் ப்ரம்ம வித்யையிலும், அதற்கு அங்க மாக உள்ள மற்ற ந்யாயம் முதலான வித்யைகளிலும் நிகரற்ற பாண்டியத்யத்தோடு கூடினவர்களாக இருந்து வருகின்றவர்களென்பதை பெரும்பாலும் புண்ய ஜனங்கள் அறிந்த விஷயமே. யம, நியம, ஆஸனப்ராணா யாம, ப்ரத்யாஹார, தாரணா, த்யான, ஸமாதி என்ற எட்டு விதமான அங்கங்களினால் நிரம்பிய ராஜ யோகத்தில் நிஷ்ணாதர்களான மஹான்களாகவே அங்குள்ளபெரியோர் களை யார் தரிசனம் செய்தாலும் அனுபவிக்கக் கூடிய வர்களாகவே இருப்பார்கள். அதற்கு உதாஹரணமாக அந்த பரம்பரையிலுள்ள ஸ்ரீ ந்ருஸிம்மபாரதீ மஹா ஸ்வாமிகளவர்களையும், ஸ்ரீ சந்த்ரசேகர பாரதீ மஹா ஸ்வாமிகளவர்களையும், ப்ரத்யக்ஷமாக நிதர்சனம் செய்ய லாம். மற்ற பீடாதிபதிகள் உயர்ந்த நிலையில் ராஜ யோகத்தில் ஆரூடர்களாகத்தான் இருந்து வந்திருக்கின் றார்கள், தற்காலத்திலும் இருக்கிறார்கள், பின் காலத்தி

லும் வரப்போகின்றார்கள் என்பதில் ஸந்தேகமே இல்லை. ஆகிலும் தற்காலத்தில் அனுபவிக்கப்படும் ஸ்ரீ சந்த்ர சேகர பாரதீ மஹாஸ்வாமிகள் அவர்களுடைய ஸ்வானுபூதியோ ஆங்காங்கு வேதாந்த நூல்களிலும், பதஞ்ஜலி மஹர்ஷி இயற்றிய யோக ஸூத்ரங்களிலும் ப்ரகாசப் படுத்தப்பட்ட லக்ஷணங்களோடு கூடினவர்களென்பதை ப்ரத்யக்ஷமாகப் பார்க்கக்கூடும். இவ்வளவு மஹிமையும் அந்த பீடத்திற்கு அதிதேவதையான வாக்தேவதையின் கடாக்ஷ வீக்ஷணமேதான். தேவியினுடைய பரிபூர்ண மான ஸாந்நித்யத்தோடுகூடின காச்மீர தேசத்திலிருந் தும், இந்த ச்ருங்ககிரி என்று சொல்லப்படும் பீடத்தின் பெருமையினால் ஆதி சங்கரபகவத் பாதர்களுடைய ஆஹ்வானத்திற்கிணங்கி ஸ்ரீசாரதா தேவி விளங்கி வருகின்றாளென்பது தெரிய வருகின்றது.

कारणपरचिद्रूपा शृङ्गाद्रै पुरसीम्नि शारदापीठगता ।
काचन विहरति करुणा काश्मीरस्तबककोमालङ्कलता ॥

என்று மாதவீய சங்கர விஜயத்தில் சொல்லியபடி விபண்டக மஹர்ஷியினுடைய ஆச்ரமத்தில் பர தேவதையானவள் பரிபூர்ணமான ஸாந்நித்யத்துடன் விளங்கி வருகின்றாளென்பது தெரியவருகின்றது. ஆதிசங்கர பகவத்பாதர்கள் திக்விஜயம் செய்த காலத் தில் ஆங்காங்குசென்று, வேத விருத்தமான துர்வாதி களை கண்டனம் செய்து அத்வைத ஸாம்ராஜ்ய ராஜ் யத்தை ஏகச்சக்ராதிபதியாக அடைந்து விளங்கிவரும் காலத்தில், காச்மீரதேசம் சென்று வாக்தேவதையான சாரதாம்பாளோடு சாஸ்த்ரார்த்தத்தை ப்ரவசனம் செய்யக்கூடிய ஸந்தர்ப்பமானது வெகுகாலம் வரை நேராமல் போய்விட்டது. காச்மீர தேசத்திலோ அநே கம் வித்வான்கள் விளங்கி வந்தார்கள். தேவியி னுடைய பரிபூர்ணமான ஸாந்நித்யத்தோடு கூடின ஆல

யத்திலோ நான்கு விதமான வாயில்கள் உண்டு. அவைகளைத்தான்

गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीम् ।
ईश्वरीं सर्वभूतानां तामिहोपह्वये श्रियम् ॥

என்ற வேத ச்ருதியே காச்மீர தேசத்திலுள்ள அம்பாளுடைய திவ்ய மந்திரத்தை வர்ணித்து வருகின்றது. அந்த மந்த்ரத்திற்குள் ஜிதேந்த்ரியனும் ஆத்மநிஷ்டனுமுள்ள மஹான்கள் தான் ப்ரவேசிக்கலாம். ப்ராக்ருத ஜனங்கள் ப்ரவேசிக்க முடியாது. அவ் வித்வான்களாக உள்ள மஹான்கள் தக்ஷிணதேசத்தில் யாருமில்லை யென்ற அபவாதமேற்பட்டு விட்டது. அதை நிவர்த்தி செய்து கொள்ள இச்சையுடன், ஆதி சங்கர பகவத் பாதர்கள் காச்மீர தேசத்திற்கு ஒரு ஸமயம் சென்றார்கள். பூர்வ த்வாரம், பச்சிம த்வாரம், உத்தரத்வாரம் இவைகளெல்லாம் ஸ்பஷ்டமாகத்திறந்து வைக்கப்பட்டிருந்தன. தக்ஷிண த்வாரம் மாத்திரம் மூடப்பட்டு இருந்தது. தக்ஷிண த்வாரத்தில் ப்ரவேசிக்கக் கூடிய வித்வான்கள் யாருமில்லை யென்பதே அதனுடைய அபிப்ராயமாகும்.

ஆதி சங்கர பகவத் பாதர்கள் சென்ற காலத்தில் அங்குள்ள வித்வான்கள் தக்ஷிண த்வாரத்தைத் திறந்து ஆசார்யாளை உள்ளே போக மறுத்தார்கள். அதற்குக் காரணமோ 'வாயிலுள்ள நாங்கள் கேழ்க்கும் கேள்வி' களுக்கு ஸமீசீனமாக விடை யளித்தால் போகலாமென்று சொல்லிவிட்டு, ஒவ்வொரு சாஸ்த்ரங்களிலும் பரமாசார்யர்களைப் பார்த்து அங்குள்ள வித்வான்கள் ப்ரச்னம் செய்தார்கள். அந்த ஸபையினுடைய அழகோ மிதிலாபுரியில் ஜனகமகாராஜனுடைய ஸந்நிதியில் யாக்ஞவல்க்ய -மஹர்ஷியைப் பார்த்து கஹோலர் ஆச்

வலாயனர் முதலிய வித்வான்கள் ப்ரச்னம் செய்வது போலவும், யாக்ஞ்யவல்க்யர் பதில் அளித்தது போலவும் இருந்தது. தார்க்கிகர்கள் முதலானவர்கள், ப்ரபல பாண்டித்யமுள்ளவர்கள் பரமாசார்யர்களைப் பார்த்து மிகவும் கடினமான ப்ரச்னங்களைச் செய்தார்கள். பரமாசார்யர்களோ அந்த ப்ரச்னங்களுக்கு உத்திரியே இல்லையென்று கண்டனம் செய்துவிட்டு 'வித்வான்களை ஜயித்துவிட்டு தக்ஷிண த்வாரத்தை ஸ்வயமாகவே திறந்துகொண்டு சாரதாம்பாளுடைய ஸந்நிதியில் சென்று தர்சனம் செய்தார்கள்.

அம்பிகையினுடைய ஸந்நிதிக்குச் சென்ற மாத்திரத்தில் ஓர் ஆகாசவாணி யேற்பட்டது. அதாவது "ஹே சங்கரா" இந்த ஸந்நிதியில் வருவதற்கு ஸர்வக்ஞத்வம், ப்ரம்மசர்யம் என்ற இரண்டு ஸாதனங்களும் அவசியமாக வேண்டும். தாங்கள் மண்டன மிச்ரர் முதலான வித்வான்களை ஜயித்தும் இந்த காச்மீர தேசத்தில் தக்ஷிண த்வாரத்திலுள்ள வித்வான்களை ஜயித்தும் ஸர்வக்ஞராக இருந்து வந்தாலும். ஸம்சுத்தி என்ற ப்ரம்மசர்யம் தங்களுக்குப் போதாது. ஸிந்து தேசாதிபதியான அமருக மகாராஜனுடைய சரீரத்தில் அனுப்ரவேசம் செய்து ராஜ போகத்தையும் கொஞ்சநாட்கள் தாங்கள் அனுபவித்த தில்லையா. அந்தக்காலத்தில் தேவதாஸிகளுடைய ஸம்பந்தம் கானவித்தையில் ஒரு ப்ரேமை ஏற்பட்டு தங்களுடைய சரீரம் அசுத்தமாக ஆகிவிட்டதினால் இந்த ஸந்நிதியில் ப்ரவேசிக்க ஸம்சுத்தி போதாது" என்று ஏற்பட்டது. அந்த ஆகாசவாணியை ஆசார்யர்கள் கவனித்துப் பார்த்து அந்த பீடத்திற்கு அதிச்வரியான வாக்தேவதை தான் இவ்விதமான வார்த்தையை உச்சரியத்திருக்க வேண்டும் என்று ஊஹித்துக் கொண்டு "எந்தசரீரத்தில் ஸம்சுத்திக்கு குறைவு ஏற்பட்டதோ அந்த சரீரத்தோடு அவன் இந்த ஸந்நிதிக்கு வருவதற்கு அர்ஹன் இல்லாது போனாலும், முன் ஜன்மாக்களில் வேறுசரீரத்தினால் அசுத்த

மாக இருக்கப்பட்டவனேயும் இந்த ஜன்மாவில் மஹா பரிசுத்தமான சரீரத்தோடு கூடியவனுக இருந்தும் அவனே யும் அனர்ஹன் என்று நிராகரிப்பது சாஸ்த்ரஸம்மதமாக ஆகுமா? அவ்விதமானுல் யாரையும் ஸம்சுத்தனென்று ஸ்வீகரிக்க முடியாது. துரீயாச்ரமத்தில் இந்த ஸங்கியாசி என்ற சப்தத்திற்குப் பொருளான சரீரத்தில் அசுத்தியைக் கல்பிக்க முடியுமா? அமருக மகாராஜனுடைய சரீரத்தில் பரகாய ப்ரவேசம் செய்திருந்த ஸந்தர்ப்பத்தில் சுத்தனே அசுத்தனே அதை நாம் இப்போது விசாரிக்க வேண்டிய அவச்யமே இல்லை. அதை வைத்துக்கொண்டு என்னே அனதிகாரி என்று சொல்லுவது கியாயமாகுமா" என்று வெகு ப்ரகாரமாக தேகசுத்தி விசாரமென்ற விஷயத்தை முன்னிட்டு பரமாசார்யர்கள் அனேகம் வித்வான்கள் ப்ரத்யக்ஷமாகப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே பூர்வ பக்ஷ ஸித்தாந்த ரூபமான விசாரம் செய்து தன்னுடைய தேக ஸம்சுத்தியை ப்ரகாசப் படுத்தினுர்கள். வித்வான் களும் 'ஹா' 'ஹா' கார கோஷத்துடன் ஆசார்யர்களைப் பூஜித்தார்கள். வாக் தேவதையான ஸரஸ்வதியும் ஆசார் யர்களுக்குக் கட்டுபட்டு ஸம்மதித்துவிட்டாள். ஆசார்யர் கள் எங்கு தன்னே அழைக்கின்ருரோ அங்கு நாம் பின் தொடர்ந்து செல்லவேண்டும் என்ற அபிப்ராயமுடைய வளாக வாக்தேவி ஆகிவிட்டாள்.

அப்பொழுது பரமாசார்யர்கள் முன்னேபோக வாக் தேவதை ஆசார்யர்களுடன் தொடர்ந்து சென்ருள். இந்த துங்கா நதி தீரத்தில் ச்ருங்க கிரிக்கு வந்த உடன் அங்கு ஒரு பெண் தவளைப்ரஸவ உபத்திரவத்தினுல் கஷ்டப்பட்டுக் கொண்டு இருந்தது. அந்த ஸந்தர்ப்பத்தில் மழையும் லேசாக வர்ஷித்துக் கொண்டு வந்தது. அந்த தவளேயை ஒரு பெரிய ஸர்ப்பம் படமெடுத்துக்கொண்டு மழையினுல் அந்த தவளைக்கு யாதொருவிதமான பாதகமில்லாதபடி ரக்ஷித்து வந்தது.) தவளையை ஆகாரமாக உடைய சத்ரு வான ஸர்ப்பம், சத்ரு பாவத்தை விட்டு விட்டு தவளையை

ரக்ஷித்த மஹிமையை கவனிக்க இந்த தேசம்தான் நிர்வைரமான ஸ்தலமென்று தீர்மானித்து, அந்த நிமிஷத்திலேயே தன்னை அந்த பீடத்திலேயே ப்ரதிஷ்டை செய்யும்படி பரதேவதை ஆசார்யர்களை வேண்டிக் கொண்டாள். ஆதி சங்கர பகவத் பாதர்களும் அவ்விதமே சாரதா தேவியை ப்ரதிஷ்டை செய்து பரிபூர்ணமான சாந்நித்யத்தோடு கூட விளங்கி வரும்படி ஏற்பாடு செய்த ஸ்தலமே ச்ருங்ககிரி என்ற புண்ய க்ஷேத்ரமாகும். அந்த க்ஷேத்திரத்தின் மஹிமையை யாரும் எக்காலத்திலும் இவ்வளவு தானென்று வர்ணிக்கமுடியாது.

त्रिदिनात लभते मुक्तिं श्रृङ्गगिर्यां नरः कलौ ।
श्रृङ्गगिर्याः समत्वं च बदर्याः नैव शस्यते ।
ब्रह्मविष्ण्वादि देवाश्च श्रृङ्गगिर्यां वसन्तिहि ॥
शारदापीठवासश्च तुङ्गास्नानं तथैव च ।
तत्पीठाधिपतेः पूर्णकटाक्षः मोक्षदायकः ॥

என்றபடி அந்த க்ஷேத்திரத்தினுடைய மஹிமை மிகவும் அநிர்வசனியமானது.



